MACMILLAN'S TAMIL READING SERIES

TAMIL
# FIFTH READER

FOR

FORM I



# ஐந்தாம் வாசக புத்தகம்





TAMIL

# FIFTH READER

FOR FORM I



BY

J. M. VELU PILLAI

முதல்பாரத்துக்குரிய

# ஐந்தாம் வாசக புஸ்தகம்



MACMILLAN & CO., LIMITED

MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1923



Price, 6 Annas] [விலை, ௬ அணா

# FIFTH READER

## ஐந்தாம் வாசக புஸ்தகம்

## CONTENTS

## சூசிபத்திரம்

முதற் பகுதி. வாசக பாடம். (PROSE.)

## 1. ஐக்கியமே பலம்.

வெகுகாலத்துக்கு முன்பு ஒரு சிங்கம் மலைக்குகையொன்றில் வசித்துவந்தது. வயதின் முதிர்ச்சியால் அது காட்டிலுள்ள மிருகங்களையும், கலைமான்களையும் அடித்துத்தின்ன வலிமையில்லாமல் கிராமங்களிலுள்ள ஆடுமாடுகளையே கொன்று தின்ன ஆரம்பித்தது.

தினந்தோறும் நான்கு எருதுகள் ஒரு வயலில் சேர்ந்து மேய்வது வழக்கம். சிங்கம் அவைகளைப் பிடித்துக் கொல்லுவதற்காகப் பலமுறை முயன்றது. அவற்றின் அருகே சிங்கம் போகும்போதெல்லாம் அந்த நான்கு எருதுகளும் சேர்ந்து கொம்புகளை நீட்டிக்கொண்டு கடுமையான பார்வையுடனும் சண்டைக்குறிப்புடனும் சிங்கத்தை நோக்கும். அவைகள் நான்கும் ஒற்றுமையுடன் இருப்பதை யறிந்து சிங்கம் அவற்றை அணுகாமல் பயந்திருந்தது. ஒன்றை எதிர்த்தால் மற்ற மூன்று எருதுகளும் சேர்ந்துகொண்டு தன்னைத் தாக்குமென்பது சிங்கத்துக்கு நன்றாகத் தெரியும்.

ஒருநாள் நான்கு எருதுகளும் ஒன்றோடொன்று சண்டை போட்டுக்கொண்டு வழக்கம்போல் ஒரேயிடத்தில் மேயாமல் தனித்தனியே மேய்ந்தன. அதனை அறிந்த சிங்கம் சமயம் பார்த்து ஓர் எருதின்மேல் பாய்ந்து அதனைக் கொன்று தின்றுவிட்டது. மறுநாள் அப்படியே வந்து வேறோர் எருதை அடித்துத் தனக்கு இரையாக்கிக்கொண்டது. பின்பு பாக்கி இருந்த இரண்டு எருதுகளும் அடுத்த இரண்டு தினங்களில் சிங்கத்துக்கு இரையாயின. ஒவ்வொரு எருதும் சிங்கத்தைத் தனியே எதிர்க்க வலிமையற்றிருந்தாலும், எல்லாம் சேர்ந்து ஒற்றுமையுடன் இருந்தபோது சிங்கம் அவைகளிடம் பயந்துகொண்டிருந்தது. ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டதால் அவைகளின் உயிருக்கே மோசம் வந்தது. ஆகையால் ஐக்கியமே பலம் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.





## 2. தீப்பறவை.

பட்சிகள் எல்லாவற்றிலும் மிகவும் பெரியது தீப்பறவை. ஆறு அடிமுதல் எட்டு அடி உயரம் வரையில் அது வளரும். அரேபியாவிலும், ஆபிரிகாவிலும் உள்ள விசாலமான பாலை வனங்களில் தீப்பறவைகள் மந்தை மந்தையாக இருக்கும். அவை இந்தியாவில் இல்லை. ஒட்டகையைப் போலவே தீப் பறவை காடுகளில் வசித்து வெகுகாலம்வரையில் தண்ணீர் குடிக்காமல் இருப்பதாலும், காலும் கழுத்தும் நீண்டிருப்ப தாலும் அதற்கு ஒட்டகப்பட்சி என்றும் ஒரு பெயருண்டு. அதன் தலை மற்ற அவயவங்களுக்கு ஏற்றபடி பெரிதாக இரா மல் மிகவும் சிறியதாக இருக்கும்.

அது பட்சியேயானாலும் பறக்கிறதில்லை. ஆகாயத்திற் பறப்பதற்கு வேண்டிய இறகு அதற்கு இல்லை. அதன் கழுத்தை மயிர் மூடியிருக்கும். அதன் கால்கள் நீளமாகவும் அழுத்தமாகவும் இருக்கும். அதனுடைய பாதத்தில் இரண்டு பெரிய விரல்கள் உண்டு. அது குதிரையைக் காட்டிலும் மிகவும் வேகமாக ஓடும். அது நேராய் ஓடினால், ஒருவரும் அதைப் பிடிக்கமுடியாது; ஆனால் நேராக ஓடாமல் வளைந்து வளைந்து ஓடுவதுதான் அதன் வழக்கம். வேடர்கள் அதை யறிந்து குறுக்கு வழியாகக் குதிரையை ஓடச்செய்து, எட்டு ஒன்பது மணிநேரத்தில் தீப்பறவையைப் பிடித்துக்கொள்ளு

வார்கள். அதன்மேல் இரண்டு மனிதர்கள் ஏறி உட்கார்ந்து போகலாம்.

தீப்பறவை மனிதனுக்கு மிகவும் உபயோகமானது. அதன் அழகான இறகுகள் பூஷணமாகவும், அதன் முட்டை ஆகார மாகவும், அதனுடைய தோல் பல வேலைகள் செய்யவும் உப யோகப்படும். குதிரையைப்போல அதை நன்ருகப் பழக்கி ஸவாரி செய்வதற்கு உபயோகிப்பதுமுண்டு. அதன் இறகு கள் அதிக விலைபெற்றவை.

முட்டை அதிக அழுத்தமாகவும் 8-சேர் ஜலம் பிடிக்கும் படி பெரிதாகவும் இருக்கும். அந்தப் பறவை மணலில் பள் ளந்தோண்டி அதிலேதான் முட்டையிடும். ஒவ்வொரு முட் டையும் மட்டையோடுகூடிய பெரிய தேங்காய் அளவு இருக் கும். ஜனங்கள் முட்டைகளை மணலிலிருந்து தோண்டி யெடுத்து ஒரு சிறு துவாரஞ்செய்து குடுக்கைகளைப்போல் குடைந்து சுத்தமாக்கி ஜலபாத்திரங்களாக உபயோகிக்கிருர் கள். புல் பூண்டு முதலியவை தீப்பறவைக்கு ஆகாரவஸ்துக் கள். சில சமயங்களில், கல், பளிங்கு, ஆணி முதலியவை களை அது விழுங்குவதுமுண்டு.

அது விவேகமில்லாத பட்சி; சத்துருக்களிடத்திலிருந்து தப்பிக்கொள்ள முடியாத காலத்தில், மணலுக்குள் தலையை அது புதைத்துக்கொள்ளும். தான் பிறரைப் பார்க்க முடியா மையினுல், தன்னைப் பிறரும் பார்க்கமுடியாதென்று எண்ணி அவ்வண்ணம் செய்கின்றதுபோலும்.

பார்வைக்கு அது கோழியைப்போல் இருத்தலாலும் நெருப்புத்தணலை விழுங்குவதாலும் அதற்கு நெருப்புக்கோழி யென்னும் பெயர் ஏற்பட்டதென்று சொல்லுவார்கள்.



## 3. அணில்.

அணில் ஓர் அழகிய சிறிய பிராணி. அது காட்டிலும் வீட்டிலும் தோட்டங்களிலும் சஞ்சரிக்கின்றது.

அணில் பல வர்ணமாகவும் பல அளவாகவும் இருக்கும். கிளைக்குக்கிளை பாய்வதற்கு உதவியாக அதன் வால் நீண்டும் மயிர் அடர்ந்தும் உள்ளன. ஒரு மரக்கிளையின் மேலாவது

ஒரு மூங்கிலின் மேலாவது பலமான கயிறுகளின் மேலாவது ஒருவன் நடக்கும்படி நேரிட்டால், அவன் தன் சமநிலையைக் காத்துக்கொள்வதற்காக இருபுறத்திலும் தன் கைகளை வேண்டும்போது நீட்டிக்கொண்டும், குறுக்கிக்கொண்டும் நடப்பான் அல்லவா! அதுபோலவே அணிலின் சமநிலையைக் காப்பதற்கு அதன் வால் உதவுகின்றது.



அணில்கள் பலவகையாக இருந்தாலும், அவை மூன்று இனத்தில் அடங்கும். அவ்வ பறக்குமணில், பெருஞ்செவ்வணில், சிறு நரை அணில் என்பன. பறக்குமணில் மரமடர்ந்த காடுகளில் இருக்கும். அதற்கு இறகில்லை: பறக்க முடியாது. ஆனாலும், இரண்டுப்பக்கத்திலும் முன்கால் பின்கால்களுக்கு இடையில் ஒரு தடித்த தோல் இருக்கிறது. அதை விரித்துக்கொண்டு ஒரு மரத்திலிருந்து முப்பது நாற்பதடி தூரத்திலிருக்கும் வேறொரு மரத்துக்குப் பாயும்; பாய்வதைப் பார்த்தால் பறப்பதுபோலவே தோன்றும். அதனாலேதான் பறக்கும் அணில் என்னும் பெயர் அதற்கு வந்தது. அது பகல் எல்லாம் தூங்கி இரவில் நெடுநேரம் சென்ற பிறகாவது அதிகாலையிலாவது வெளியேவரும்.

பெருஞ் செவ்வணிலும் மரமடர்ந்த வனங்களிலேதான் குடியிருக்கும். அது பார்வைக்கு ஒரு சிறு பூனையைப்போல் இருக்கும். மரங்களில் கூடுகட்டும்.

சிறு நரை அணில் மிகவும் சாதாரணமானது. நாம் எல்லாரும் தினம் பார்த்துவருவது அதுதான்; அது மரத்தில் இருப்பதும் நிலத்தில் ஓடியாடித் திரிவதும் எல்லாருக்கும் தெரியும். அது வீட்டின் கூரையில் கூடுகட்டும். பூனையும் பருந்தும் அதைப் பிடிக்க எங்கேயென்று காத்திருக்கும். அது தீங்கற்ற அழகான சிறிய பிராணி: காய்கனிகளை விரும்பி அது தின்னும். அதற்கு முன்வாயில் இரண்டு நீண்ட பற்கள் உண்டு. அவற்றால் காய்கனிகளையும், கொட்டைகளையும் கடித்துத்தின்னும். அதை யாராவது பிடிக்கப்பார்த்தால் மிகவும் பலமாகக் கடித்துவிடும். குஞ்சிலே பிடித்தால், அதை நன்றாகப் பழக்கி வளர்க்கலாம்.



## 4. திமிங்கிலம்.

திமிங்கிலம் எல்லாப் பிராணிகளைக்காட்டிலும் பெரியது. அதிக வளர்ச்சியடைந்த திமிங்கிலம் நீளத்தில் நூறடியும், குறுக்களவில் முப்பத்தைந்து அடியும் இருக்கும். அதன் வால்மட்டும் ஐந்தடி அகலமும் இருபத்துநான்கடி நீளமும் இருக்கும்; அதன் வாய் பதினைந்தடி நீளமும் பத்தடி உயர



மும் உள்ளது. அது வாயைத்திறந்தால் ஒரு மனிதன் குதிரையில் ஏறிக்கொண்டு அதற்குள் நிற்கலாம். நல்ல பலசாலிகளான நூறு மனிதர்களுடைய எடைக்கு அதன் எடை சரியாக இருக்கும்.

திமிங்கிலம் பார்வைக்கு ஒரு பெரிய மீனைப்போல் இருப்பதாலும், ஜலத்தில் வசிப்பதாலும், அதை மச்சமென்றே நெடுங்காலம் வரையில் எண்ணியிருந்தார்கள். அது மச்சம் அல்லவென்றும் மிருகமென்றும் இப்பொழுது தெரியவருகிறது. மச்சங்கள் தண்ணீருக்குள்ளேயே இருந்து மூச்சுவிடும். திமிங்கிலமோ நீர்மட்டத்துக்கு மேல்வந்தே காற்றை உட்கொள்ளும். ஒருமணிநேரம் கடலுக்குள் இருக்கும்படி நேர்ந்தால், அது செத்துப்போம். அரைமணி நேரத்துக்கொருமுறை சுவாசம் விடும்பொருட்டு அது ஜலமட்டத்துக்கு மேலே வரும்.

மீன்கள் முட்டையிடும்; திமிங்கிலமோ மிருகங்களைப் போல் குட்டிபோட்டு அவற்றிற்குப் பால்கொடுக்கும். அதனுடைய ரத்தமும் மிருகங்களுடைய ரத்தத்தைப்போலவே சிவப்பாயிருக்கும்.

திமிங்கிலத்திலிருந்து மனிதனுக்கு மிகவும் உபயோக மான இரண்டு பொருள்கள் அகப்படுகின்றன: ஒன்று கொழுப்பு; அதைக்கொண்டு எண்ணெயும், வர்த்தியும் செய் கிறார்கள்; மற்றது பல்லுக்குப் பதிலாய் அதன் வாயில் அமைந்திருக்கும் முள்; அதனால் சீப்பும் கத்திப்பிடியும் செய் கிறார்கள்.

வேட்டைக்காரர்கள் தோணிகளிலிருந்துகொண்டு திமிங் கில வேட்டை ஆடுவார்கள். திமிங்கிலம் மூச்சு விடுவதற்காக நீர்மட்டத்துக்கு மேலேவரும் சமயம் பார்த்திருந்து, நீண்ட கயிறு கட்டியிருக்கும் பெரிய ஈட்டியை அதன் உடலின்மேல் வீசியெறிந்து பாய்ச்சுவார்கள். அது தன் வாலினால் சமுத்திர ஜலத்தை ஓங்கியடித்து, மலைபோல் அலையை எழுப்பி முழுகி மிதந்து ஓடியாடித் தத்தளித்துத் தளர்ந்து களைத்துப் போகும் வரையில், அந்தக் கயிற்றை வேண்டியவரையில் விட்டுக் கொடுத்துக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்வார்கள். களைப் படைந்ததும், சுவாசம்விட்டுச் சுவாசம் வாங்குவதற்காக மறு படியும் மேலே வரும். உடனே அதன்மேல் அநேக ஈட்டிகளை வீசி எறிந்து அதை வதைப்பார்கள்.

ஆனாலும் சில சமயங்களில் திமிங்கிலம் தன் பலமான வாலினால் தோணியைத் தாக்கிக் கவிழ்த்துவிடும் அதனால் அதிலுள்ளவர்கள் முழுகி இறந்துபோவதுண்டு. திமிங்கில வேட்டை மிகவும் அபாயகரமானது.



## 5. துவிசக்கரம் (பைசிக்கில்).

படத்தில் நீங்கள் பார்க்கிற சிறுவன் என்ன செய்கிறான்? அவன் நடக்கவில்லை; சவாரிசெய்கிறான்; ஆனாலும் அவன் ஏறிச் சவாரிசெய்வது மாடும் அன்று; சிறிய குதிரையும் அன்று. துவிசக்கரம் என்னும் விநோதமான ஒரு வாக னமே. துவிசக்கரத்தின்மேல் ஏறிச்செல்லும் அநேக மனித ரைச் சென்னபட்டணத்திலும் வேறு பட்டணங்களிலும் பார்க்கலாம். யூகம் மிகுந்த ஓர் ஆங்கிலேயரால் அது முப்பது வருஷங்களுக்குமுன் முதல் முதல் செய்யப்பட்டது. லக்ஷக் கணக்கான ஜனங்கள் இங்கிலாந்தில் இப்பொழுது அதனை உபயோகிக்கிறார்கள்.



துவிசக்கரம் என்றால் இரண்டு சக்கரம். இரண்டு சக்கரங்கள் உள்ள வாகனமானதால் அதற்கு அப்பெயர் வந்தது. சாதாரணமான வண்டிகளில் சக்கரங்கள் பக்கத்துக்கு ஒன்றாக இருக்கும் துவிசக்கர வண்டியில் உருளைகள் முன்னும் பின்னுமாக இருக்கும். பம்பரமானது சுற்றாமல் இருக்கும்போது நிற்கமாட்டாது: சுற்றும்போதுதான் நிற்கும். அப்படியே துவிசக்கரமும் அசைவற்றிருக்கும்பொழுது நிற்காது: ஓடும்பொழுதுதான் அப்படி நிற்கும்.

துவிசக்கரத்தை இழுத்துக்கொண்டுபோக எருதும் வேண்டாம், குதிரையும் வேண்டாம். அதன்மேல் ஏறிச் சவாரி செய்பவன் அதைத் தானாகவே செலுத்துகிறான். பின் சக்கரத்தின் மத்தியில் இரண்டு எஃகு முளைகளை இரண்டு பக்கங்களிலும் பொருத்தியிருக்கிறார்கள். இந்த இரண்டு முளைகளின்மேலும் காலைவைத்து மாறிமாறி அழுத்தச் சக்கரங்கள் சுழன்று சுழன்று செல்லும்: சவாரி செய்பவன் எவ்வளவு வேகமாக அழுத்துகிறானோ அவ்வளவு வேகமாக அவை உருளும். சவாரி செய்வதில் பழக்கம் உள்ளவன், அதிவேகமாக



ஓடும் பந்தயக் குதிரையின் ஓட்டத்துக்குச் சரியாக மணிக்குப் பதினைந்து இருபதுமைல் தூரம் செல்லுவான். ஆனாலும், வழியானது மேடுபள்ளம் இல்லாமல் சமமாக இருக்கவேண்டும். மேடுபள்ளமான வழிகளில் துவிசக்கரம் வேகமாகச் செல்லாது.

துவிசக்கரம் எஃகினால் செய்யப்படும். அதன் விலை நூறு ரூபாமுதல் ஐந்நூறு ரூபா வரையில் இருக்கிறது. அதிற் சவாரிசெய்ய முதல் முதல் பழகுபவன் கீழே விழுந்தாலும் விழுவான். சாமர்த்தியமும் பலமும் உள்ள ஒருவன் ஐந்து ஆறு முறை ஏறிப்பார்த்தபின் சவாரிசெய்ய நன்றாகப் பழகி விடுவான். சவாரி செய்பவன் தான் கையிற் பிடித்திருக்கும் பிடியைத் திருப்பித் துவிசக்கரத்தை நினைத்த இடத்துக்குச் செலுத்தலாம்.



## 6. முதலை.

முதலையானது பார்வைக்கு ஒரு பெரிய பல்லியைப் போல் இருக்கும். சில வேளைகளில் அது ஜலத்திலும் வேறு சில சமயங்களில் நிலத்திலும் வசிக்கும். ஆபிரிகாவிலும் இந்தியாவிலும் உள்ள பெரிய நதிகளில் முதலைகள் விசேஷமாக இருக்கின்றன.

முதலையின் உடல் நீண்டும் வால் உறுதியாகவும் நீளமாகவும் இருக்கும். அதன் வாய் பெரியதாகவும் மிகவும் கூர்மையான பற்களோடு கூடியும் இருக்கிறது. அதன் முதுகு தடித்



தும், செதிள்கள் நிறைந்தும் இருக்கும். அதன் கால்கள் குறுகலானவை. தண்ணீரில் அது மிகவும் வேகமாக நீந்தும்; நிலத்திலும் வேகமாக ஊர்ந்துசெல்லும்; ஆனாலும் மனிதனைப் போல் அது தரையில் வேகமாகச் செல்லாது.

ஆற்றின் ஓரமாகவுள்ள மணலில் பெண்முதலையானது ஏறக்குறைய முப்பது முட்டைகள் வரையில் இடும். பிறகு சூரியவெப்பத்தால் முட்டைகளிலிருந்து குட்டிகள் வெளிப்படுகின்றன. அவை அவ்வாறு வெளிப்படுவதற்கு நாற்பது தினங்கள் வரையில் ஆகும். முதலைக்குட்டி முதலில் ஆறு அங்குல நீளம் இருக்கும். முட்டையிலிருந்து குட்டியாக வெளிவந்தவுடனே அது தண்ணீருக்குள் தானே ஓடி விடுகிறது.

முதலை ஒரு பயங்கரமான பிராணி. மற்ற ஜந்துக்கள் அதைக்கண்டு பயப்படும். பெரும்பாலும் மீன்களும், ஜலத்தில் வாழும் பறவைகளும் முதலைக்கு இரையாகும். அல்லாமலும் தன்னிடம் எந்தப் பிராணிவந்து அகப்பட்டுக் கொண்டாலும் அதை முதலையானது தனக்கு இரையாக்கிக் கொள்ளும். அது நதிக்கரையில் திருடனைப்போல் பதுங்கிக் கொண்டு சிறிதும் சலனமின்றிப் படுத்துக்கிடக்கும். தண்ணீர் குடிப்பதற்காக ஆற்றுக்குச் செல்லும் பிராணிகள் அவ்வாறு அது கிடப்பதை விசேஷமாகப் பார்ப்பதில்லை. அவை அதன் அருகே வந்தவுடன் அவைகளுக்குத் தெரியாமல் திடீரென்று அவற்றின் மேல்விழுந்து தண்ணீருக்குள் இழுத்துக் கொண்டுபோய் அவைகளை விழுங்கிவிடும்.

மிகவும் பயங்கரமான அந்தப் பிராணி இருப்பதனாலேயே இந்தியாவில் பெரிய நதிகளில் நீராடுவதும் அவற்றின் ஓரமாகச் செல்வதும் அபாயத்துக்கிடமாயிருக்கின்றன. ஜனங்கள் வருவதை முதலைகள் எதிர்பார்த்துக் கொண்

டிருந்து புலிகளைப்போல் அவர்களை இழுத்துச் செல்லுகின்றன. ஆனால் இப்போது ஜனங்கள் முதலைகள் உள்ள இடங்களுக்கெல்லாம் சென்று அவற்றைச் சுட்டுக்கொண்டு வருவதால் முன்போல் அவை அதிகமாக இல்லை.





## 7. கட்டுமரம்.

இந்தியாவின் கிழக்கோரமாக உள்ள பாகம் முழுவதிலும் கடலோரங்களில் அலைகள் வந்து பலமாக மோதும். அவைகள் கரையை நோக்கிச் சுருண்டு சென்று வெகுதூரம் கேட்கும்படியான ஓசையோடு கரையில் தாக்கும். சாதாரணமான தோணிகள் இந்த அலைகளைத் தாண்டிச் செல்ல முடியாது; மீறிச் சென்றாலும் துண்டு துண்டாக உடைந்து போம்.

ஆனாலும் சென்னபட்டணத்திலும், கடற்கரையை அடுத்த வேறுபல இடங்களிலும், செம்படவர்கள் கட்டுமரம் என்ற தெப்பத்தை உபயோகிக்கிறார்கள். படத்தில் காட்டியிருப்பது ஒரு கட்டுமரம். கனமில்லாத நாலைந்து மரத்துண்

டுகள் கயிற்றினல் கட்டப்பட்டு ஆனதே கட்டுமரமாகும். ஜலத்தைவிட இலேசானதால் அது தண்ணீருக்குள் முழுகிப் போகாமல் மிதக்கும். ஒரு பாத்திரம்போல உள்ளீடு ஒன்றும் இல்லாமல் இருக்கும். சாதாரணமான தோணியானது அதிக மான தண்ணீர் கொண்டால் முழுகிவிடும்.

கட்டுமரத்தில் உட்குடைவு இல்லாமையால் தண்ணீர் புகுந்து நிற்க இடமில்லை. அலையானது கட்டுமரத்துக்கு மேலே வாரி அடித்துச் சென்றாலும் அது மிதக்கும். கட்டு மரக்காரர்கள், இடுப்பில் கட்டிக்கொள்ளும் துணியையன்றி வேறொன்றும் தரிப்பதில்லை. ஓலையால் முடைந்த ஒரு குல் லாவைத் தலையில் போட்டுக்கொள்வார்கள்; நீண்டு ஒடுங்கிய துடுப்பினல் கட்டுமரத்தைத் தாங்கி வலிப்பார்கள்; மீனைப் போல நீந்துவார்கள். ஒவ்வொரு சமயத்தில் பெரிய அலை வந்து அவர்களைப் புரட்டிவிடுவதும் உண்டு. ஆனாலும் கொஞ்சநேரம் நீந்திச் சமாளித்துக்கொண்டு மீண்டும் கட்டு மரத்தில் பாய்ந்தேறுவார்கள். அவர்கள் கடலுக்கும் புயலுக் கும் மழைக்கும் அஞ்சாத நெஞ்சுபடைத்த தைரியசாலிகள். எந்தக்காலத்திலும் சமுத்திரத்தில் போவதென்றால் அவர்கள் பின் வாங்கமாட்டார்கள். மீன் பிடிப்பதற்குப் போகும் பொழுது, வலையையாவது தூண்டிலையாவது எடுத்துக்கொண்டு தாங்கள் பிடிக்கும் மீன்களைப் போட்டுவைப்பதற்கு ஏற்ற ஓலைப்பெட்டியுடன் போவார்கள்.

படத்திற்காட்டிய கட்டுமரம் கரையில் இருக்கிறது. கட்டுமரக்காரர்கள் அதைத் தூக்கிக்கொண்டுபோய்க் கடலில் விடுவார்கள்.



## 8. தாமரை.

தாமரை ஜலத்தில் உண்டாகும் அழகான ஒரு கொடி. அதன் இலைகள் வட்டமாகவும் பெரியவைகளாகவும் இருக் கும். அவை தண்ணீரின்மேல் மிதக்கும். இனி வேறு இல்லை யென்று சொல்லும்படியான பெரிய ஜாதித்தாமரைக்கு "விக் டோரியா" என்று பெயர். அந்த இனத்து இலை படத்தில் நீங் கள் பார்க்கிறபடி, ஒரு சிறு குழந்தை உட்கார்ந்திருக்கக்கூடிய அளவு பெரியது.



தாமரையானது தடாகங்களில் உண்டாகும். அதை இந்தியா தேசத்தில் எல்லா இடங்களிலும் பார்க்கலாம். இந்துக்கள் அதன் புஷ்பத்தை மிகவும் மேன்மையாக நினைக்கிறார்கள். மகாவிஷ்ணுவின் பிராட்டியாகிய இலக்குமிதேவி தாமரையில் வசிப்பதாகச் சொல்லுவதால், அத்தேவிக்கு, 'பத்மவதி' என்ற பெயர் வந்தது: வடமொழியில் பத்மம் என்றால் தாமரையென்பது பொருள்.

தாமரையில் வெண்டாமரை, செந்தாமரை, நீலத்தாமரை என மூன்று ஜாதி உண்டு. வெண்டாமரையைப் பதுமினியென்றும் கவிகள் சொல்வதுண்டு. அதன் காய் கன்னிகாரமென்றும், பூவிலுள்ள தேன் மகரந்தமென்றும் சொல்லப்படும்.

ஆலயங்களில் ஏற்றும் திருவிளக்குகளுக்குத் தாமரையின் நீண்ட தண்டிலிருக்கும் பழுப்பான நூலைத் திரியாகத் திரித்து இந்துக்கள் உபயோகிக்கிறார்கள். தாமரையிலையை அநேகர் போஜனபாத்திரமாக வாழையிலையைப்போல் உபயோகிப்பதுண்டு. விதையை ஔஷதமாகவும் இளங்கிழங்கைப் பச்சையாகவேனும் சமையல்செய்தேனும் உணவாகவும்

உபயோகிக்கிறார்கள். முற்றின காயை இந்தியாவின் வட பாகங்களில் கடைகளில் விலைக்கு வாங்கி வேகவைத்துத் தின்கிறார்கள்.



## 9. குரங்கு.

மிருகங்களுக்குள் மிகவும் விநோதமானது குரங்கு. அதற்கு இந்துக்கள் விசேஷ மரியாதை செய்கிறார்கள். குரங்குகளில் அநேகவகையுண்டு; சிலவற்றிற்கு வால் நீளமாக இருக்கும். வேறு சிலவற்றிற்குக் குட்டையாக இருக்கும். அவை இந்தியாவில்மட்டும் இருக்கின்றன. அவைகளை மிகவும் சுலபமாகப் பழக்கலாம். சில கிராமங்களைச் சுற்றியுள்ள மரங்களில் அவை வசிக்கும். கிராமங்களில் வீட்டுக் கூரையின்மேல் சஞ்சரிக்கவும் சிலர் அவற்றிற்கு இடங் கொடுக்கிறார்கள். பாம்பையும் பூச்சிகளையும் கொல்லுவதனால் அவை ஒருவாறு ஜனங்களுக்கு உபயோகப்படுகின்றன. மனிதர் என்னென்ன செய்கிறார்களோ அவற்றை அவைகளும் பார்த்துச் செய்யும். அவ்விதம் செய்வதில் அவைகளுக்கு அதிகமான பிரியமுண்டு.

காய்களைப் பறிப்பதற்காக, தென்னை முதலிய உயரமான மரங்களில் எளிதில் ஏறமுடியாத ஜனங்கள், குரங்குகளை மரத்தின்மேல் துரத்தி அவைகளின்மேல் கல்லை எறிவார்கள். உடனே குரங்குகள் மரங்களிலிருந்து காய்களைப் பிடுங்கி அவர்களின்மேல் எறியும்.

சில தேசங்களில் குரங்குகளைப் பிடிக்கவேண்டுமானால், அவை இருக்கும் மரத்தடியிற்போய் அவைகள் பார்க்கும்படி ஒரு பாத்திரத்தில் தண்ணீரை வைத்து முகம் கழுவுவார்கள். பின்பு தண்ணீரிற் பிசினைக் கரைத்து அம்மரத்தடியில் வைத்துவிட்டுப் பக்கத்தில் ஒளிந்துகொள்வார்கள். அவர்கள் மறைந்தபின், குரங்குகள் இறங்கிவந்து தாமும் அதேவிதமாக முகத்தைக் கழுவிக்கொள்ளும். அப்போது அவற்றின் கண் இமைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும். அப்பால் அவைகள் கண்தெரியாமல் மயங்கி மனிதர்கள் கையில் சுலபமாக அகப்படும்.

ஒருமுறை ஒரு தோணிக்காரன் ஓடத்திலிருந்து கரைக்கு வந்து ஒரு சிறு குச்சியால் பல் தேய்த்து முகம் கழுவினன். மறுநாள் ஆற்றங்கரைக்கு அவன் வந்தபோது தான் முதல் நாள் பல் தேய்த்ததுபோலவே, அத்தேசத்திலிருந்த குரங்குகளும் நூற்றுக்குமேல் அவ்விடத்தில் வந்து செய்ததைக் கண்டான்.



மனிதக்குரங்கு.

சில குரங்குகள் மனிதர்களைப்போலவே உயர்ந்து வளர்ந்திருக்கும். அவற்றுள் கொறில்லா, ஊராங்—ஊட்டாங் என்பவைகளே இப்போது உள்ளன. இவற்றைவிடப் பெரிய சாதி இல்லை. படத்தில் இருப்பது கொறில்லா. அது அதிக

பலமும், மற்ற மிருகங்களுக்கு அஞ்சாத தீரமும் உடையது. உருவத்திலும் பலத்திலும் மனிதனைக்காட்டிலும் மேற்பட்டது. உடம்புமுழுவதும் மயிரால் மூடப்பட்டும், முகம் கறுத்தும் இருக்கும். கைகள் முழங்கால்வரையில் நீண்டிருக்கும். அவைகள் தடிகளை வைத்துக்கொண்டு சண்டை செய்யும். குட்டிகள் இருப்பதற்காக அவைகள் மரங்களிலே கிளைகளையும் தழைகளையும்கொண்டு ஒருவகையான சிறுவீடு செய்யும். நிலத்தில் வெகுதூரம் நடக்க முடியாவிட்டாலும், மரத்துக்கு மரம் வெகு வேகத்துடன் தாவிப்பாயும். இந்த ஜாதிக் குரங்குகளைப் பிடித்துச் சாதுவாக்கி, மனிதனைப்போலவே அநேக வேலைகள் செய்யும்படி பழக்கி இருக்கிறார்கள். அவை, ஆபிரிகா கண்டத்தில்மட்டும், மனிதர்கள் வசிக்கும் கிராமங்களுக்கு வெகுதூரத்திலுள்ள அடர்ந்த வனங்களில் சஞ்சரிக்கின்றன.

ஊராங்-ஊட்டாங் என்பது ஒருவகையான குரங்கு; அது கொறில்லா அளவு உயரமில்லை: ஐந்தடிக்குக் குறைவாயிருக்கும் அது நேராக நிற்கமுடியாது. நடக்கவேண்டுமானல் கைவிரல்களை மடக்கிக்கொண்டு அவலட்சணமாக நடக்கும். ஆனல் மரத்தின்மேல் வெகு வேகமாகச் செல்லும். அதுவும், கொறில்லா என்ற ஜாதிக்குரங்கும் கூட்டங் கூட்டமாகச் சஞ்சரிப்பதில்லை. காட்டின் ஒரு பக்கத்தில் ஆணும் பெண்ணுமாக இருக்கும். இந்துமகா சமுத்திரத்திலிருக்கும் போர்னியோ சுமாத்திரா என்னும் தீவுகளே ஊராங்-ஊட்டாங்குக்கு இருப்பிடமாகும்.

## நாய்க்குரங்கு.

வால் மிகவும் குறுகலாகவுள்ள சில குரங்குகள் உண்டு. அவை பார்வைக்கு நாயைப்போல் இருத்தலால் அவற்றை நாய்க்குரங்கென்று சிலர் சொல்லுகிறார்கள். நாய்க்குரங்கின் படம் அடுத்த பக்கம் இருக்கிறது. ஆபிரிகாவில் மாத்திரமே நாய்க்குரங்குகள் உள்ளன. அவை பார்வைக்கு விகாரமானவை; மூக்கு சிவப்பாகவும், கதுப்பு நீலமாகவும் இருக்கும். அவை கூட்டம் கூட்டமாகத் திரியும். அவைகளுக்குத் திருட்டுத்தனம் அதிகம். இராக்காலத்தில் நூற்றுக்கணக்காகப் புறப்பட்டு, யாராவது வந்தால் எச்சரிக்கை செய்வதற்காக இரண்டு



மூன்று குரங்குகளைக் காவல் வைத்துவிட்டு, தோட்டங்களில் நுழைந்து அங்கேயிருக்கும் கனிகளையெல்லாம் கொள்ளை கொண்டுபோவது வழக்கம். வயல்களிலுள்ள தானியங்களைத் திருடுவதும் உண்டு. அதிக மூர்க்கமும் பலமும் உடையன வாகையால், அவற்றைக் கண்டு ஜனங்கள் மிகவும் பயப் படுகிறார்கள். இந்தியாவில் இருக்கும் நீண்ட வாலுள்ள சாதா ரணமான குரங்குகளுக்குப் பழம் முதலியவற்றைச் சாப்பிடு வதற்குமுன் அவற்றை வாயில் அடக்கி வைப்பதற்குக் கதுப் பிலே ஒரு பை உண்டு. சாப்பிட நேரம் கிடைத்தபோது அல்லது பசிக்கும்போது பையிலிருக்கும் பழத்தை வாய்க் குள் தள்ளிச் சாப்பிடும்.

## குரங்குகளின் கதை.

(1) ஒரு தேசத்தில் அகலமான நதியொன்றுண்டு. அதன் ஒரு பக்கத்திலே காடும் மற்றொரு பக்கத்திலே கிராமங்களும் அவற்றின் பக்கத்திலே தானிய வயல்களும் இருந்தன. அங் கேயுள்ள சில மரங்களில் குரங்குகள் கூட்டங் கூட்டமாக வாசம்செய்து கிராமத்தாருடைய தானியத்தைத்தின்று அவர் களுக்கு அதிகமான துன்பத்தை உண்டாக்கி வந்தன.

அதற்கு என்ன செய்யலாமென்று அவ்வூரார் ஓர் ஆலோசனை பண்ணினார்கள். குரங்குகளைக் கொல்லவாவது வேறு துன்பம் செய்யவாவது அவர்களுக்குச் சிறிதும் மனமில்லை. ஆனாலும் அவைகளை யெல்லாம் பிடித்துக் கொண்டுபோய் ஆற்றுக்கப்பால் இருக்கும் காட்டுக்குள் விட்டு விடலாமென்று நிச்சயித்தார்கள். நெடுங்காலம் காட்டில் வாசஞ் செய்து குரங்குகளின் சுபாவத்தை அறிந்திருந்த ஒரு வயோதிகனுடைய யோசனையால், தேங்காய்களைச் சேகரித்து, ஒவ்வொன்றிலும் குரங்கின் கை புகக்கூடிய ஒரு சிறு துவாரம் செய்து, சோற்றை அதற்குள் பாதிவரையில் நிரப்பி மரங்களின் அடியில் வைத்தார்கள். குரங்குகளெல்லாம் இறங்கி வந்து தேங்காய்களைப் பார்த்தன. பார்க்கவே உள்ளே சாதம் இருந்ததைக் கண்டு, உடனே ஒவ்வொன்றும் தன் தன் கையைத் தேங்காய்க்குள் ஆசையுடன் நுழைத்து, ஒரு பிடியன்னத்தைப் பிடித்துக்கொண்டது. இத்தருணத்தில் அவ்வூரார் எல்லாரும் குரங்குகளண்டை ஓடினார்கள். குரங்குகளுக்குச் சாதத்தின்மேல் இருந்த ஆசை அதிகமானதால், அதைவிட்டுக் கையை வெளியில்வாங்க மனம் வரவில்லை கையில் மாட்டிக்கொண்ட தேங்காயோடு மரமேறித் தப்பவும் முடியவில்லை. இந்த நிலைமையிலே குரங்குகளைச் சுலபமாய்ப் பிடித்து ஒரு படகிலேற்றிக் காட்டுக்குள் கொண்டுபோய்த் தேங்காயை உடைத்து அக்குரங்குகளை யெல்லாம் விட்டுவிட்டார்கள். பேராசைபிடித்த ஒருவனைத் தேங்காய் ஓட்டுக்குள் கை நுழைத்த குரங்கு போன்றவன் என்று சொல்வது வழக்கம்.

(2) குல்லா வியாபாரி ஒருவன், ஒரு காலத்தில் விற்பனைக்காக ஒரு குல்லா மூட்டையை எடுத்துக்கொண்டு காட்டுவழியாகப் போனான்; அப்பொழுது ஒரு மரத்தடியில் இளைப்பாறுவதற்காகத் தங்கினான். சூரியவெப்பம் அதிகரித்தபடியால், வெயில் உறைக்காதிருக்கும்படி ஒரு குல்லாவைத் தலையில் வைத்துக்கொண்டு மரத்தடியில் படுத்துத் தூங்கினான். அதை மரத்திலிருந்து பார்த்திருந்த வானரங்கள் அவன் தூங்கிவிட்டது கண்டு மரத்தினின்றும் இறங்கிவந்து ஒவ்வொன்றும் ஒவ்வொரு குல்லாவாக எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு மரத்தில் ஏறின. வர்த்தகன் தூங்கி எழுந்தபொழுது மரத்

தில் ஒவ்வொரு குரங்கின் தலையிலும் ஒவ்வொரு குல்லா இருப்பதையும் பக்கத்திலிருந்த மூட்டையில் குல்லா ஒன்றுகூட இல்லாததையும் கவனித்தான்; பிறகு அவன் குல்லாக்களைக் குரங்குகளிடமிருந்து வாங்கத் தன்னால் ஆனவரையிலும் முயற்சி செய்தான்; ஒன்றும் பயன்படவில்லை. வெயிலின் உக்கிரத்தினால் உண்டான இளைப்பை ஆற்றிக்கொள்ளலாமென்று தன் தலையிலிருந்த குல்லாவை எடுத்துக் கீழேபோட்டுவிட்டு அப்பால் சென்றான். உடனே குரங்குகளும் அவ்வண்ணமே தத்தம் தலையிலிருந்தவற்றையும் கழற்றிக் கீழே வீசின. வர்த்தகன் மிகவும் சந்தோஷமடைந்து அவைகளையெல்லாம் சேர்த்து எடுத்துக்கொண்டு போனான்.





## 10. எரிமலை.

எரிமலையின் படம் ஒன்று மேலே இருக்கிறது பார்! எரிமலையின் உச்சியில் ஒரு பெரிய துவாரம் இருக்கும். அந்தத் துவாரம் பூமிக்குள் மிகவும் ஆழமாகச் செல்லும். எரிமலைகள் சிலகாலங்களில் துவாரத்தின் வழியே புகை, அக்கினிச்

சுவாலை, கல், உருகிய பாறை ஆகிய இவற்றை அதிவேகமாக வும் பலமாகவும் ஆகாயத்தில் அதிக உயரமாய்ச் செல்லும் படி கக்கும். கருமையான சேறுபோல உருகிய பாறை முத லியன ஆறுபோல் பெருகித் தடுப்பதற்கரிய உக்கிரத்துடன் நெடுந்தூரம் மலைச்சாரலிற் பாயும். அவை நெருப்பைப்போல் சுடும். பல தினங்கள் வரையில் அந்தக் கொதிப்பு அடங்காம லிருந்து பிறகு கொஞ்சங்கொஞ்சமாக ஆறிவிடும்.

நாம் நடக்கும் இப்பூமியின் அகட்டில் எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் பெரிய தீ இருக்கின்றது. பல்லாயிர வரு ஷங்களுக்கு முன்பு பூமியானது சூரியனைப்போல ஓர் அக்கினி கோளமாயிருந்தது. வெகுகாலம் சென்றபின் அது படிப்படி யாக ஆறிக் குளிர்ந்து இப்பொழுதிருக்கிற வண்ணம் ஆயிற்று. மேற்பக்கம், தேங்காயின் ஓடுபோல நடப்பதற்குக் கெட்டியா கவும் குளிர்ச்சியாகவும் இருக்கிறது. அநேக இடங்களிலே மேற்பக்கத்தில் இருக்கும் துவாரம் நடுவிலிருக்கும் பெரிய தீவரையிலும் செல்லும். இப்படிப்பட்ட துவாரத்தையுடைய மலைகளே எரிமலைகள் என்று சொல்லப்படும்.

நூற்றுக்கணக்கான வருஷங்கள் வரையில் எரிமலைகள் அக்கினிச் சுவாலையையும் கற்களையும் கக்காமல் இருப்பதும் உண்டு. அதனால் ஜனங்கள் அவை அடியோடே ஓய்ந்து போயின என்றும் அவற்றால் ஒரு துன்பமும் உண்டாகா தென்றும் எண்ணி அவற்றின் சாரலில் வந்து குடியேறி வீடுகள் கட்டிக்கொண்டு பயிர்த்தொழில் செய்வார்கள். இப் படியிருக்க, சிலவேளை திடீரென்று பேரொலி கேட்கும்; பூமி நடுங்கும்; பெரிய புகைப்படலங்கள் குபீர் குபீரென்று கிளம் பிச் சூரியனை மறைத்துப் பகலை இரவாக்கும். பாறைகள் உரு கிய பெரிய ஆறு அதிக உக்கிரத்துடன் சாரல் வழியாக ஓடி உயிர்களை நாசம் செய்யும்; ஆறுகள், புலங்கள், வீடுகள் இவையெல்லாம் இருந்தவிடம் தெரியாதபடி மூடுண்டுபோம். இத்தாலி தேசத்தில் பம்பியை என்னும் பட்டணத்திற்கு இவ்விதமான சம்பவம் இரண்டாயிரம் வருஷத்திற்கு முன் நேர்ந்தது. அப்பட்டணம் இருந்த இடம் தெரியாமலே இப் போது முழுவதும் மறைந்துபோய்விட்டது. அந்தப் பட்ட ணத்துக்கு நேர்ந்த ஆபத்து தூரத்திலிருந்து பார்த்தவர் எழுதி வைத்த ஒரு பழைய நூலால் தெரியலாயிற்று. சில வருஷங்

களுக்கு முன்பாக அந்த நகரம் தற்செயலாகக் கண்டுபிடிக்கப்பட்டது. மூடியிருந்த மண்ணையெல்லாம் நீக்க, அந்தப் புராதன நகரம், இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இருந்த விதமாகவே, வீடுகள், தெருக்கள், கதவுகள், பல கணிகள், வீட்டுத் தட்டுமுட்டுப் பொருள்கள், உண்கலங்கள் முதலிய எல்லாவற்றோடும் தோற்றியது. குழம்பாறு வந்து மூடின காலத்தில் குடிகள் இருந்தவிதமாகவே அவரவர்களுடைய கங்காளங்களும் இருந்தன. இத்தாலி தேசத்துக்குள் யாத்திரை செய்பவர்கள் இந்த அதிசயத்தைப் பாராமல் போவதில்லை.



## 11. ஒட்டகைச் சிவிங்கி.

மிருகங்கள் எல்லாவற்றிலும் உயரத்தால் சிறந்தது ஒட்டகைச் சிவிங்கி. அது மிகவும் நீண்ட காலும் நெடுங்கழுத்தும் உடையது. பார்வைக்கு ஒரு புள்ளிமான்போல் இருக்கும். சிவிங்கியைப்போல் தோலில் புள்ளியும், ஒட்டகையைப்போல் நீண்ட கழுத்தும் உடையதால் அதற்கு ஒட்டகைச் சிவிங்கி யென்று பூர்விக ஜனங்கள் பெயரிட்டார்கள்.

அது மரநெருக்கமுள்ள தேசங்களில் வசிக்கும். மரத்தின் இலையும் தழைகளுமே அதற்கு முக்கியமான உணவு. ஏறக்குறைய இருபதடி உயரமிருப்பதால் அது மரங்க

B

ளின் கிளைகளைத் தன் தலையினால் தொடும்: அதிவேகமாக ஓடும். ஆபிரிகா தேசத்தில் அது சஞ்சரிக்கின்றது.

அதற்குச் சிறிய கொம்புகள் உண்டு. அது மாட்டைப் போல் அசைபோடும்; மாட்டைப்போல் பிளவுபட்ட குளம்பு களும் அதற்கு உண்டு. அது மிகவும் நீண்ட தன் நாக்கினால் இலைகளைப்பற்றி இழித்துத் தின்னும்; நீண்ட கழுத்தைத் தாழ்த்திப் பூமியில் முளைக்கும் புல்லையும் மேயும். அது மானைப்போல் பயந்த தீங்கற்ற மிருகம்; சிங்கமாவது சிவிங்கி யாவது தன்னைத் தாக்கவருவதைக் கண்டால் பறந்தோடிப் போம். நெருங்கித் தாக்கினால், தன் பின்னங்காலால் உதைத்து உதைத்துத் தன்னைக் காத்துக்கொள்ளும்.



## 12. கழுகு.

கழுகானது மிகவும் பெரிய பட்சி. ஒருமுறை உயரக் கிளம்பிவிட்டால் அது வெகுதூரம் பறந்துசெல்லும். ஆனால்

முதலில் அது தரையிலிருந்து கொஞ்சம் கஷ்டப்பட்டுக் கிளம்பி அதிக உயரம் போகும்வரையில் சிலநேரம் பூமிக்கு அருகிலேயே வட்டமிட்டுக்கொண்டிருக்கும்.

கழுகுகளில் பலவகைகள் உண்டு. சில கழுகுகள் இறகுகளை விரித்துக்கொண்டிருக்கும்போது பார்த்தால் ஏழு அல்லது எட்டடி அகலமிருக்கும். ஆனால் எல்லாஜாதிக் கழுகுகளும் இரண்டு விஷயங்களில் ஒத்திருக்கின்றன. அவற்றின் கழுத்து மயிர் ஒன்றும் இராமல் வழுவழுப்பாக இருக்கும். அவற்றின் தேகத்திலிருந்து ஒருவிதமான துர்நாற்றம் உண்டாகும். இந்த இரண்டு குணங்களும் எல்லாக் கழுகுகளிடத்திலும் இருக்கின்றன.

பெரும்பாலும் பிணங்களே கழுகுகளுக்கு ஆகாரமாக இருக்கின்றன. எந்த இடத்திலாவது மாடோ அல்லது மானோ செத்துக்கிடந்தால் அங்கே கழுகுகள் பல பக்கங்களிலிருந்தும் கூட்டமாகப் பறந்துவந்து மாமிசத்தை நிதானமாகக் கடித்துத்தின்னும். பிணங்களை நரிகளும் கழுகுகளைப் போலவே தின்னும். இதனால் கழுகுகளும், நரிகளும் செத்த பிராணிகளால் ஏற்படும் அசுத்தங்களைப் பூமியிலிருந்து நீக்கிக் காற்றைச் சுத்தப்படுத்தி ஜனங்களுக்கு மிக்க உதவி புரிகின்றன.



## 13. நீர்யானை.

***நீர்யானை*** யென்பது காண்டா மிருகத்தைப்போன்ற ஒரு வகையான மிருகம். அதன் உடல் பருத்தும், கால்கள் தடித்தும் குறுகியும், தோல் மிகவும் அழுத்தமாகவும் இருக்கும். அதற்குக் கொம்புகள் இல்லை. மிகவும் அகன்ற வாயும் பெரிய பற்களும் அதற்கு உண்டு.

கிரீக் பாஷையில் ஹிப்போபடமஸ் என்னும் சொல்லுக்கு ஆற்றுக் குதிரை என்று அர்த்தம்; ஆனாலும் அது சிறிதும் குதிரையை ஒத்திருக்கவில்லை. கிட்டத்தட்ட நாலடி உயரமும் பன்னிரண்டடி நீளமும் இருக்கும். அதன் உடல் மிகவும் பருத்திருப்பதால் அதைத் தாங்கும்பொருட்டுக் கால்கள் குறுகியிருக்கின்றன. நீர்யானைக்கு ஒவ்வொரு காலி



லும் நான்கு விரல்கள் உள்ளன: ஒவ்வொன்றுக்கும் தனித் தனியே குளம்பு உண்டு.

நீர்யானை ஆபிரிகாகண்டத்தில் முக்கியமாய் நைல் நதிக் கரையில் வாசஞ்செய்யும். காண்டாமிருகத்தைப்போல் தண் ணீரிலேயே வெகுநேரம் கிடக்கும். செடிகளின் வேர், கிழங்கு, காய், இலை முதலியவைகளை உண்டு உயிர்வாழும். காண்டா மிருகங்கள் மந்தை மந்தையாக வாசஞ்செய்யும். அவற்றால் மனிதனுக்கு எள்ளளவும் பயனில்லை. தோல் போர்க்கவசத் துக்கும் பல் யானைத்தந்தம்போல் சில வேலைகளுக்கும் சில சமயங்களில் உபயோகப்படும். ஆபிரிக்கர்கள் அதன் கொழுத்த மாமிசத்தைத் தின்பதுண்டு அதன் வேட்டையில் அவர்களுக்கு மிகுந்த பிரியம்.



## 14. மிருகங்கள் அரசனை ஏற்படுத்திய கதை.

மிருகங்களுக்கெல்லாம் தலைமையாயிருப்பது சிங்கம். அதனாலேயே அதற்கு மிருகேந்திரன் என்னும் பெயருண்டு. ஒரு காட்டில் நெடுங்காலம் ஒரு சிங்கமானது மிருகங்களுக் கெல்லாம் தலைமை வகித்து அரசுபுரிந்து வந்தது. கொஞ்ச காலத்துக்கெல்லாம் அது இறந்துபோக, வேறோர் அரசனை ஏற்படுத்தவேண்டுமென்று மிருகங்களெல்லாம் ஒரு சபை கூடின. அவை ஒரு காட்டிற் கூடி இறந்துபோன சிங்கத் தின் கிரீடத்தைச் சபை நடுவில் வைத்து, பெண்ணரசு கூடா



தென்று பெண் சிங்கத்தை விலக்கிவிட்டன. சிங்கத்தின் குட்டிக்கோ மற்ற மிருகங்களையெல்லாம் அடக்கியாள வயதும் பலமும் போதாவென்று அதையும் தள்ளிப்போட்டன.

இப்படியிருக்க மற்ற மிருகங்களில் ஒவ்வொன்றும், தான் தான் ஆதிபத்தியத்தை வகிக்கவேண்டுமென்று பின் வருமாறு தன்தன் மேன்மையை உரைத்தது:—

சிவிங்கி, 'மற்றெல்லா மிருகங்களிலும் நான் சிங்கத்தை ஒத்திருக்கிறேன்' என்றுப், கரடி 'நான் அதிக பலசாலி: யாருக்கும் அஞ்சேன்; கண்டவர் நடுங்குவர்; நான்தான் அரசனாகவேண்டும்' என்றும், மான் 'ஓட்டத்தில் என்னிலும் மிக்கார் யார்'? என்றும், குதிரை 'நான் அதிவேகமா யோடுவேன்; நான் பெருந்தன்மையுள்ளவன்; மனிதர்கள் எல்லாரும் என்னை மதித்துப் பாராட்டிப் போற்றுகிறார்கள். நான் தலைவனாதலே முறைமை' என்றும் பலவாறாகச் சொல்லின. குரங்கு எழுந்துவந்து, 'நான் உங்கள் எல்லாரிலும் சமர்த்தன்; சகல சிருஷ்டிகளுக்கும் தலைவனான மனுஷ்யனை ஒத்திருப்பவன் நானே; என்னைப்போல யார் உளன்? கீச்சுக்கீச்சென்று கத்தி

உங்களுக்கு விநோதம் உண்டாக்குவேன். நான்தான் அரசன் ஆதல் வேண்டும்' என்றது.

கிளி, 'பேசுவது ஒரு யோக்கியதையானல் உங்கள் எல்லோரிலும் மனிதர் பாஷையை நான் நன்ருகப் பேசுவேன்' என, குரங்கு அதை நோக்கி, 'நீ பேசினுலும் அதில் ஒரு சொல்லும் உனக்கு விளங்காது. மேலும் நீ சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லுகிருய்' என்றது

தம்மை மனிதருக்கு ஒப்பிட்டுப் பேசிய இந்த இரண்டு பிராணிகளையும் பார்த்து மற்றவை நகைத்தன.

குள்ளநரி எழுந்து, 'யானை ஏன் பேசவில்லை? இதுவரையில் வாயைத் திறக்கவில்லையே!' என்று சொல்ல, யானையானது 'எனக்குத் தற்புகழ்ச்சியில் பிரியமில்லை. என் உருவமும் பலமும் உங்களுக்கே தெரியும்; நான் எந்த மிருகத்துக்கும் அஞ்சேன், அச்சம் குடிகொண்ட மானுக்கும் போராட முடியாத குதிரைக்கும் மனிதரைப்போல நடிக்கும் குரங்குக்கும் நான் எப்படிக் கீழ்ப்பட்டு நடப்பேன்?' என்றது.

முடிவில் மிருகங்களெல்லாம் சேர்ந்து, யானையே காட்டுக்கு அரசனுக இருக்கவேண்டுமென்று தீர்மானித்தன. யானை மற்றெல்லா மிருகங்களைக்காட்டிலும் பரிமாணம், பலம், ஞானம் இவற்ருல் சிறந்ததாகவும், நற்குண நற்செய்கைகள் அமைந்து எதற்கும் தீங்கு விளைவிக்காத குணமுடையதாகவும் இருத்தலால், அதையே அரசனுக ஏற்படுத்தின.

மானமும் பெருந்தன்மையும் உயர்குலத்தினரிடத்திலேயே உண்டு என்பது இக்கதையினுல் விளங்கும்.



## 15. உருளைக்கிழங்கு.

ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷங்களுக்கு முன் உருளைக்கிழங்கை அமெரிகாவிலிருந்து ஐரோப்பாவுக்குக் கொண்டுபோய்ப் பயிரிட்டார்கள். இப்பொழுது உலகமெங்கும் பயிரிடுகிருர்கள். கிழங்கைத் தண்ணீரில் வேகவைத்துச் சாப்பிடுகிருர்கள். அது சாப்பாட்டுக்கு மிகவும் உபயோகமானது. இந்தியாவில் அரிசியும் சோளமும் ஆகாரமாவதுபோல அயர்லாந்துதேசத்து ஏழைகள் அநேகர்க்கு உருளைக்கிழங்கு முக்கிய உணவாக இருக்கிறது.



சென்ற இருநூறு வருஷகாலமாக உருளைக்கிழங்கை இந்தியாவில் பயிரிட்டு வருகிறார்கள். அது சமபூமியிலும் மலைப்பிரதேசங்களிலும் உண்டாகும். ஆனாலும் உயர்ந்த ஜாதிக்கிழங்கு மலைகளிலேதான் விளையும். அவ்விடங்களிலுள்ள குளிர்காற்று அப்பயிருக்கு அவசியமானது. சமபூமியில் விளைவதைப் பார்க்கிலும் மலைநாடுகளில் விளையும் கிழங்கு மிகவும் பெரிதாகவும் ருசியாகவும் இருக்கும். சென்னை ராஜதானியில் நீலகிரிக் கிழங்குக்கு மேற்பட்டது வேறு எங்கும் கிடையாது.

இந்தியாவில் வசிக்கும் ஐரோப்பியர்கள் எல்லாரும் முக்கியமான சாப்பாட்டோடு உருளைக்கிழங்கை உண்பார்கள். இந்துக்களும் அதனை விசேஷமாக உபயோகித்து வருகிறார்கள்.



## 16. விளக்குமண்டபம்.

அடுத்தபக்கத்தில்காணப்படுவது ஒருவிளக்குமண்டபம். விளக்குக்கோபுரம் என்பது சிலவிடங்களில் ஐம்பது அறுபது அடி உயரமும், சிலவிடங்களில் நூறடி உயரமுமுள்ள ஒரு வட்டமான மண்டபம். தூரப்பார்வைக்கு அது ஒரு தூணைப்போல் இருக்கும். கடலோரமாயுள்ள பட்டணங்களிலும் கடலின் நடுவே சில மலைகளிலும் ஒரு பாறையின்மேல் அது பெரும்பாலும் கட்டப்பட்டிருக்கும். வெகு தூரத்தில் ஓடும் கப்பல்களில் இருப்பவர்கள் பார்க்கக்



கூடிய பிரகாசமான விளக்கு அதன் சிகரத்தில் வைக்கப்பட்டிருக்கும்.

அதன் அடியில் ஒரு கதவு இருக்கும். அது வழக்கமாய் மூடப்பட்டிருந்தாலும் அதைத் திறக்கலாம். அந்த மண்டபத்தின் உட்புறத்தில் அடியிலிருந்து உச்சிவரையில் வளைந்து வளைந்து போகும் ஒரு படிக்கட்டு இருக்கும். வெளிச்சமும் காற்றும் புகும்வண்ணம் மத்தியில் பலகணிகள் உண்டு. அதன் கீழே ஒருவன் குடியிருப்பான்: அவன் வேலை இராமுழுதும் விளக்கு எரியும்படி பார்த்துக்கொள்ளுவதே. அவன் தனியே இருப்பான். சிலவேளை தன் குடும்பத்தோடும் இருப்பான். அவன் பகற்காலத்தில் தூங்கி இரவெல்லாம் உறக்கமின்றி விழித்திருந்து விளக்கு அணையாமல் கவனித்துக்கொண்டிருப்பான்.

விளக்குமண்டபத்தின் உபயோகம் என்ன? கப்பலானது மரத்தாலும் இரும்பாலும் செய்யப்படும். அது தண்ணீரில் மிதக்கும்படி செய்யப்பட்டிருக்கிறது. மிதக்கும்வரையில் அது

செம்மையாகவே யிருக்கும்; உடையாது. சில காலங்களில் பெரும் புயலடித்தால், காற்றும் அலைகளும் கப்பலை அடித்துக்கொண்டுபோய்ச் சமுத்திரத்திலுள்ள பெரிய கற்பாறைகளில் மோதித் துண்டுதுண்டாய் உடைக்கும். அதிலிருக்கும் ஜனங்களும் முழுகிப்போவார்கள். கடற்பிரயாணிகள் இவ்விதமான பாறைக்குப் பயப்படுவார்கள். தரை தட்டினும் பயம். சாதாரணமாக அவர்கள் சமுத்திரத்தைச் சற்றும் அஞ்சார்கள். ஆனால் பெருங்காற்றில் கரைக்கு வெகுதூரத்திலே நிற்பதற்குப் பிரியப்படுவார்கள்.

சமுத்திரத்தில் அநேக இடங்களில் அபாயகரமான பெரும்பாறைகள் தண்ணீர் மட்டத்திற்குக் கொஞ்சம் கீழே இருக்கும். அவை இருண்ட இராக்காலங்களிற் கண்ணுக்குப் புலப்படா. அவ்வகையான மலைகளுக்கு விலகியோடும்படி மாலுமிகளுக்கு எச்சரிக்கை செய்து அவர்களைக் கரைக்கு அழைப்பதற்கே விளக்கு மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. இக்காரணத்தினால் அதற்கு 'கலங்கரை விளக்கம்' என்ற பெயரும் உண்டு. விளக்குமண்டபத்தைப் பார்த்து அதிலிருந்து வெகுதூரத்தில் ஓடி ஜாக்கிரதையாகச் செல்லலாம். துறைமுகப் பட்டினங்கள் உள்ள இடங்களைத் தெரிவிப்பதற்கும் அது உபயோகமாகிறது.

## 17. காண்டாமிருகம்.

காண்டாமிருகம் அல்லது ரைனசிரஸ் என்பது மிகவும் பெரிய மந்தமான ஒரு மிருகம். அதன் நிறம் கறுப்பு. அதன் கால்கள் மிகவும் சிறியவை: தோலோ மிகவும் தடிப்பானது. எந்த மிருகத்தின் தோலும் அவ்வளவு கனமிராது. பார்வைக்கு அதன் தோல் இருப்புத் தகட்டை ஒத்திருக்கும்.

காண்டாமிருகத்தின் மூக்கில் ஒரு கொம்பு முளைத்திருக்கும். ரைனசிரஸ் என்னும் சொல்லுக்குக் கிரீக் பாஷையில் கொம்பு மூக்கு என்று அர்த்தம். இந்தக் கொம்பினால் வேர்களையும் கிழங்குகளையும் கிண்டி எடுக்கும்; சத்துருக்களிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ளும். அந்த மிருகத்தோடு எந்த மிருகமும் சண்டை தொடுக்காது. சிங்கத்திற்



கும் யானைக்கும் அதைக் கண்டால் நடுக்கம். அதன் நீளம் ஏறக்குறையப் பதினேரடியும் உயரம் நாலடியும் இருக்கும்.

காண்டாமிருகத்திற்கு ஒவ்வொரு காலிலும் மும்மூன்று விரல்களும், அவை ஒவ்வொன்றின் அடியிலும் ஒவ்வொரு குளம்பும் உண்டு. அந்த மிருகத்தில் இரண்டு ஜாதி உண்டு. ஒன்று இந்தியாவிலிருக்கிறது. அதற்கு ஒரே கொம்பு உண்டு. மற்றொரு ஜாதி ஆபிரிகாவில் இருக்கின்றது. அதற்கு முன் பின்னாக இரண்டு கொம்புகள் உண்டு. அதன் தோல் இந்து தேசத்துக் காண்டாமிருகத்தின் தோலினளவு தடிப்பாயில்லை. ஆற்றங்கரைகளில் அடர்ந்த காடுகளில் அது வசிக்கும். அது நன்றாக நீந்தும்: ஜலத்தில் மிக்க பிரீதியுடையது. அதிலே வெகுநேரங் கிடந்து கழிக்கும். எருமையைப் போலச் சேற்றில் படுத்துப் புரள அதற்கு அதிக இஷ்டம். வேர்களையும் கிழங்குகளையும் இலையையும் புசிக்கும். யானை யைப்போல மனிதனுக்கு உபயோகம் உள்ளதன்று. அதன் பருத்த பற்கள் சில வேலைகளுக்கு உபயோகப்படும்.





## 18. ஆகாயகமனம்.

கருடன் வெகுதூரம் உயரமாக ஆகாயத்தில் பறப்பதை நீங்கள் பார்த்திருக்கக்கூடுமே. பெரும்பாலும் அது பறக்கும்போது தன் இறகுகளை அசைக்காமல் ஒரே மாதிரியாக விரித்துக்கொண்டு செல்லும். கருடனைப்போலவே வானத்தில் ஓர் யந்திரத்தின் உதவியால் கப்பல் ஓடுவதை நாம் பார்க்கலாம். சில வருஷங்களுக்கு முன்புதான் ஆகாயக்கப்பல் கண்டுபிடிக்கப்பட்டது.

வெகுதூரம் உயரத்தில் செல்லும்போது ஆகாயக் கப்பல் பார்வைக்கு ஒரு கருடனைப்போலவே இருக்கும். அந்தக் கப்பல் கனமாக இராமல் மிகவும் லேசாக இருக்கும். சாதாரணமாக அது லேசான உலோகத் தகடுகளால் செய்யப்படுகிறது.

ஏறக்குறைய அது பதினறு அடி முதல் இருபதடிவரையில் நீளமுள்ளதாக இருக்கும். நடுவில் தொட்டிபோன்ற ஓர் உறுப்பும், இரண்டு பக்கங்களிலும் ஆறடி அகலமும் பதினன்கடி நீளமுமுள்ள இறகுகள்போன்ற இரண்டு உறுப்புக்களும் அதில் உள்ளன. தொட்டியின் முன்பக்கத்தில் ஓர் யந்திரம் இருக்கிறது. காற்றின் உதவியால் அது தொட்டியை முன்னே இழுத்துச் செல்லும், அந்தத் தொட்டியிலேதான் ஜனங்கள் உட்காருவார்கள்.

யந்திரத்தை முடுக்கிவிட்டவுடன் கப்பல் வேகமாக முன்னே செல்லும், இறகுகள் போன்ற உறுப்புக்களின் அடியிலிருந்து வேகத்தோடு காற்று மேலே வீசும்போது கப்பல் மிதந்து ஆகாயத்தில் வெகுதூரம் பறந்து செல்லுகிறது. யந்திரம் வேலைசெய்துகொண்டிருக்கும் வரையில் தான் கப்பல் போகும். கப்பலை நமக்கு இஷ்டமான பக்க்ங்களுக்குச் செலுத்தும்பொருட்டு, தொட்டியின் பின்பக்கத்தில் முடுக்கிபோன்ற ஓர் உறுப்பு இணைக்கப்பட்டிருக்கிறது. அதைத் திருகிவிட்டால் நமக்கிஷ்டமான பக்கத்தில் கப்பலைச் செலுத்தலாம்.

ஆகாயக் கப்பலானது 15,000 அடி உயரம்வரையில் செல்லும். அந்த உயரத்திலிருந்து கீழே பார்த்தால் பூமியிலுள்ளவர்கள் எறும்புகளைப்போல் காணப்படுவார்கள். ஆகாயக்கப்பல் அதிக உயரம் போவதல்லாமல் மிக்க வேகமாகவும் செல்லும். ஒருமணி நேரத்தில் 100 அல்லது 120 மைல் தூரம் அது ஓடுகிறது. புகைவண்டியோ பெரும்பாலும் மணிக்கு 40 மைலுக்குமேல் ஓடாது.

புயல்காற்று அடிக்கும்போது ஆகாயக்கப்பலை வானத்தில் நிறுத்தமுடியாது. புயலில் அகப்பட்டால் அது ஒரு தோணியைப்போல் தலைகீழாக விழுந்துவிடும். ஆகையால் ஆகாயக்கப்பலில் ஏறிச் செல்லுபவர்கள் சலனமற்ற காற்றுள்ள சமயம் பார்த்துக் கிளம்புவார்கள். இன்ன சமயத்தில் புயலடிக்கும் என்பதைத் தெரிந்துகொள்வதற்கு அவர்களிடம் தக்க கருவிகள் உண்டு அவற்றின் உதவியினல் அபாயம் ஒன்றும் நேரிடாது என்பதை நன்ருக அறிந்துகொண்டு கப்பலை விடுவார்கள்.

ஆகாயக்கப்பல்களில் பலமாதிரிகள் இருக்கின்றன. சில பெரியவைகளாகவும் வேறுசில சிறியவைகளாகவும் இருக்கும். பெரிய கப்பல்களில் 30 ஜனங்கள்வரையில் உட்காரலாம். சிறிய கப்பல்களில் இரண்டொருவருக்குத்தான் இடமிருக்கும். உல்லாசமாகச் செல்லுவதற்கேனும் பெரிய பொருள்கள் இருக்கும் இடத்தைத் தெரிந்துகொள்வதற்கேனும் இந்தக் கப்பல்களை உபயோகிக்கிறார்கள். பகைவர்களுடைய சேனைகள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பதற்காக இவைகள் ஐரோப்பாவில் இப்பொழுது உபயோகப்பட்டு வருகின்றன.



## 19. மரங்கள்.

கல்லும் செடியும் பூமியில் இருக்கின்றன. அவை யிரண்டும் பிராணிகளைப்போல இடம்விட்டு இடம்பெயர முடியாது. ஆனால் கல்லுக்கு உயிரில்லை. செடிக்கு உயிருண்டு செடி

வளருகின்றது. ஒரு விதையை நிலத்தில் ஊன்றி ஜலம் விட்டுக்கொண்டுவந்தால் அது செடியாகி மரமாகி வளர்ந்து பருத்து முதிர்ந்து நாளடைவில் உலர்ந்து பட்டுப்போம். கல்லுக்கு உயிருமில்லை; வளர்ச்சியுமில்லை. வேறொரு முக்கிய வித்தியாசமும் உண்டு. கல்லானது எப்போதும் ஒரே மாதிரியாக இருக்கும். அதைப் பொடிப் பொடியாக உடைத்தாலும், கூறுகளெல்லாம் ஒரே தன்மையாக இருக்கும். செடிக்கோ வெவ்வேறான அநேக உறுப்புக்கள் உண்டு. ஒவ்வோர் உறுப்பும் தன்தன் தொழிலைச் செய்யும். மனிதனுக்குத் தலை கால் இரைப்பை முதலியவை இருப்பதுபோல், செடிக்கும் வேறுவேறு அவயவங்கள் உண்டு அவை என்ன?

படத்தில் உள்ள மரத்தைக் கவனித்துப் பார்த்தால் அதன் சில பாகம் பூமிக்குள்ளும் சில பாகம் பூமிக்கு வெளியிலும் இருப்பது தெரியும். பூமிக்குள் இருப்பது அதன் வேர். வெளியே கவைகள், சிறு கொம்புகள், இலை, பூ, காய், பழம் முதலியவை இருக்கும். இவற்றுள் ஒவ்வோர் உறுப்பும் தன்தன் வேலையைச் செய்கின்றது.

செடிகள் வெவ்வேறு அளவாக இருக்கும். சில, பூமியிலே படர்ந்து, ஓர் அங்குல உயரங்கூட வளராமல் மிகவும் குட்டையாக இருக்கும். சில, இருநூறடி உயரம் வளரும். ஆனாலும் மரத்தின் தன்மை எப்படி இருப்பினும் அதற்கு வேரும் தாளும் இலையும் உண்டு. ஒவ்வொரு சிறிய மரமும் காட்டில் வளரும். அவ்வளவு அதிக உயரமாக வளர்ந்த மரமும் முதன்முதல் சிறிய வித்திலிருந்து முளைத்தே உண்டாகிறது.

நெல்லை விதைத்துத் தண்ணீர் பாய்ச்சினால் அது முளைத்துப் பயிராகி வளர்வது தெரியுமல்லவா? எல்லா வித்துக்களும் அதேமாதிரி வளரும். சில வித்துக்கள் அதிசீக்கிரத்தில் இரண்டு மூன்று தினத்திலே செடியாகும். சில வித்திலிருந்து முளை கிளம்ப ஒரு மாதத்திற்கு மேலேசெல்லும். ஒவ்வொரு செடிக்கும் முதன்முதல் உணவு வித்திலிருந்தே கிடைக்கும். அந்த ஆகாரத்திற்குத் தண்ணீருடைய சகாயம் வேண்டும். சில விதைகளையும் விதைகளினின்று முளை கிளம்பும் விதத்தையும் அடுத்த படத்தில் காட்டியிருக்கிறோம்.



முதலிற் காட்டியிருக்கும் பெரிய மரமானது முதன் முதல் இதைப்போலவே சிறு முளையாகத்தான் இருந்தது. நடுவில் ஒரு விதை தோன்றுகின்றது. அடுத்தாற்போல வலப் புறத்தில் வேரானது நிலத்தை உருவிக்கொண்டு கீழே யிறங்கு வதும், கொஞ்சகாலத்தில் கட்டு அவிழ்ந்து மண்ணைக் கிளப் பிக்கொண்டு இலை தலைகாட்டுவதும், அப்பால் இடப்பக்கத் திற்காட்டியபடி நிலத்தைப் பிளந்துகொண்டு இரண்டு இலை கள் புறப்படுவதும், அதன்மேல் வேர் நீண்டும் இலை பருத் தும் இருப்பதும் இந்தப் படத்தால் விளங்கும். இதுவரை யில் அந்தச் செடிக்குவேண்டிய உணவை வித்தே தந்தது. அதன்மேல் வித்திலிருந்த சத்து நீங்க, பயிர் தனக்கு வேண் டிய உணவை பூமியிலிருந்து வேரின் வழியாகவும், வாயுவி லிருந்து இலைகளின் மூலமாகவும் அடையும்.

பெரிய மரத்தின்வேர் மிகவும் பருமனாக இருக்கும். மரத் தின் ஒவ்வோர் உறுப்புக்கும் தனித்தனி வேலை உண்டு. வேர்களின் தொழில்கள் என்ன? காற்றினாலும் மழையினா லும் அழிந்துபோகாமல் மரத்தைக் காப்பது வேர்தான். ஒரு மரமானது ஒரு பக்கமும் சாயாதபடி கட்டுகின்ற பெரிய வடங்கள்போல் வேர்கள் உதவுகின்றன. மரத்துக்கு ஆகாரத் தைச் சம்பாதிப்பதும் வேர்தான். வேர்கள் நிலத்தில் வெகுதூ ரம் செல்லும். சில மரங்களுக்கு வேர் நூறடிவரையில் போகும். மண்ணிலிருந்து வேண்டிய உணவைக் கிரகித்து மரத்துக்கு அளிக்கும். ஆனாலும் மழை பெய்தால்தான் வேண்டிய

உணவுகிடைக்கும். மரத்துக்குத் தண்ணீர் அகப்படாவிட்டால் பட்டுப்போம். சில பெரிய மரங்கள் வெகுநாள் மழை இல்லாவிட்டாலும் பட்டுப்போகாமல் இருக்கும். அதற்குக் காரணம் அவற்றின்வேர் நீர்மட்டம்வரையில் ஆழமாகப் போவதே. தண்ணீர் அகப்படாவிட்டால் எல்லாச் செடிகளும் வாடிப்போம். வேர்கள் எப்படி உணவைக் கிரகிக்கும். திரவ ரூபமாய் இருக்கும் உணவை அவை உறிஞ்சுகின்றன? கடற் பஞ்சு இன்னதென்று உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அது தண்ணீரையும், மையொற்றியானது மையையும், எரிகிற வர்த்தியானது எண்ணெயையும் இழுப்பதுபோல் பெரிய வேரிற் பிரியும் சிறுவேரிலிருந்து கிளைக்கும் நுண்ணிய சல்லிவேரானது திரவரூபமாக இருக்கும் பயிருணவை உறிஞ்சுகின்றது.



## 20. மர எண்ணெய்.

டர்ப்பன்டைன் என்னும் மர எண்ணெய், தெளிவாயும் சுத்தமாயும் அதிக லேசாயும் இருக்கும். அது நெடியுள்ள ஒருவகையான மணம் உடையது; அது சுலபமாய்ப் பற்றி எரியும். எரியும்பொழுது, சுடர் பெரிதாயும், புகை அதிகமாயும் இருக்கும். காகிதத்தின்மேல் ஒரு துளி விட்டால் கொஞ்சநேரத்தில் விட்ட இடம் தெரியாமல் மறைந்துபோம்.

அதற்கு என்ன காரணம்? கொதிக்கும் தண்ணீர் ஆவியாய் மாறிக் கண்ணுக்குப் புலப்படாமற் போவதுபோல, அந்தத் தைலம் ஆவியாக மாறுகிறது. அவ்வளவு சுலபமாக ஆவியாய் மாறுவதால் அதற்குப் பரிணும தைலம் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். சீக்கிரம் ஆவியாகப் பரிணமிக்கும் இயல்பினுல்தான் அது சித்திரவேலைக்காரருக்கு எப்பொழுதும் அவசியமாக இருக்கிறது.

குங்குலியத்தை நீங்கள் பார்த்திருக்கலாம். அது ஒரு வகைப் பிசின். பார்வைக்குச் சிவந்த கண்ணாடிபோல் இருக்கும். தொட்டால் கொஞ்சம் ஒட்டிக்கொள்ளும்: சுலபமாக எரியும்: நீரில் கரையாது. ஆனுலும் ஸ்பிரிட்ஸ் (சாராயம்) என்னும் நீரிலும், மேலே சொன்ன மர எண்ணெய் போன்ற பரிணும தைலத்திலும் அது கரையும். குப்பிகளின் வாயை அடைப்பதற்கும், முத்திரையரக்கும் சவர்க்காரமும் செய்வதற்கும் உபயோகப்படும்.

குங்குலியமும் டர்ப்பன்டைனும் ஒருவகையான தேவதாரு என்னும் விருட்சத்தினின்று உண்டாகின்றன. அது வட அமெரிகாவில் உண்டாகும் மிகவும் நீண்ட மரம். வேறொரு ஜாதி தேவதாரு மரத்தில் பெட்டிகள் செய்யும் சாதாரணமான பலகையை அறுக்கிறார்கள்; அதற்கு வெள்ளைச் சாதிக்காய்ப் பலகை என்று பெயர். இந்தப் பாடத்தின் முதலில் உள்ள படத்தில் தேவதாரு மரத்தையும் அதில் ஜனங்கள் டர்ப்பன்டைன் இறக்குவதையும் பார்க்கலாம். அந்த மரங்களில் மையம்மட்டும் செல்லும்படி ஆழமாக வெட்டினுல் வெட்டுவாயிலிருந்து தேன்போலும் தடித்த மஞ்சட்பால் வடியும்.

வடியும் பாலைக் கீழே பாத்திரங்கள் வைத்துப் பிடித்து இறுக மூடிய ஒரு பாத்திரத்தில் அதைப் பெய்து காய்ச்சினுல் இரண்டு வஸ்துக்களாக அது பிரிந்துபோம். அவற்றுள் ஒன்று ஆவி. ஒரு சிறு (Tube) குழாயின் வழியாக வேறொரு பாத்திரத்தில் அது புகுந்து அங்கே குளிரும்படி செய்திருக்கும் உபாயத்தால் திரவரூபம் அடையும். அதுதான் டர்ப்பன்டைன் என்னும் தைலம். மற்றது இறுகிய சிவந்த அல்லது மஞ்சள் நிறமுள்ள பிசினுகிய குங்குலியம்.

பரிணும தைலங்களில் பயனுற் சிறந்தது டர்ப்பன்டைன் தான். சித்திரவேலைக்காரர் வர்ணம் சேர்க்கும்போது அதை முக்கியமாக உபயோகிக்கிறுர்கள். சிவப்பு, மஞ்சள், பச்சை வர்ணங்களை ஆளிவிதை எண்ணெயிற் கலந்து, கலவையில் டர்ப்பன்டைன் தைலத்தைச் சேர்ப்பார்கள். டர்ப்பன்டைன் கலந்திருந்தால், வர்ணம் நீர்த்து (Brush) துகிலிகையிலி ருந்து தாராளமாக இறங்கும். வர்ணத்தைக் காகிதத்தில் அல்லது மரத்தில் தடவினுல் டர்ப்பன்டைன் சீக்கிரம் ஆவி யாய்ப் பரிணமிக்கும்; வர்ணமும் விரைவிற் காய்ந்துபோம். மெருகெண்ணெய் செய்வதற்கும் இந்தத் தைலம் உபயோகப் படும். இஃது எவ்வகையான கொழுப்பையும் லேசில் பற்ற றச்செய்யும். துணியில் நெய்ப்பற்றுலுண்டாகும் கறைகளை இதைக்கொண்டு நீக்குகிறுர்கள்.

இதுவல்லாமல் லவங்கத் தைலம், ஜாதிக்காய்த் தைலம் முதலியனவும் பரிணும தைலங்களாம். இவைகளெல்லாம் தெளிவாயும் மென்மையாகவும் இருக்கும். இவை மிகுந்த நெடியுள்ளன: சுலபமாக எரியும். சாதாரணமான எண்ணெ யைப்போலக் காகிதத்தைக் கறையாக்காமல் சீக்கிரத்தில் ஆவி யாக மாறிப்போம்.



## 21. மௌனத்தால் அவமானப்படுத்தல்.

ஒரு பள்ளிக்கூடத்தில் ராமன் என்ற சிறுவன் ஒருவன் படித்துக்கொண்டிருந்தான். அவன் சிறுவனுக இருந்தாலும் நல்லபுத்திசாலி. அதிவிரைவில் மிகவும் சாதுரியமாகப் பேசு வான். பகல்நேரம் முழுவதும் அவன் படித்துக்கொண்டிருப் பான். சாயங்காலவேளையில் பொழுதுபோக்கும் பொருட்டு அவன் வீணைவாசிப்பது வழக்கம்.

ஒருநாள் மாலைக்காலத்தில் அவன் வழக்கம்போல் தன் வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து வீணைவாசித்துக்கொண் டிருந்தான். அவன் வீணைவாசிக்க ஆரம்பித்தபோது மஞ் சள்வெயில் இருந்தது. நாழிகை ஆக ஆக இருட்டிப்போய் விட்டது. வீணை வாசிப்பதற்கு இருட்டு ஒரு தடை இல்லை யாதலால் அவன் விளக்கையேற்றி வைத்துக்கொள்ளாமலே வீணை வாசித்துக்கொண்டிருந்தான்.

அப்போது: அவ்வழியே போன ஒரு வைசியன் வீணையின் ஒலியைக்கேட்டு வாயில் புகைச்சுருட்டை வைத்துக்கொண்டு அந்தத் திண்ணையோரமாக வந்தான். அவன் மிக்க குறும்புத்தனமுள்ளவன்; ஓயாமல் பேசிக்கொண்டேயிருப்பான்; மரியாதையே தெரியாதவன். வாயைவிட்டுச் சுருட்டையெடுக்காமலே மிகவும் வேகமாக ராமனுக்கு அருகே சென்று அவனைப்பார்த்து முரட்டுத்தனமாக, 'இந்த இருட்டு வேளையில் இங்கே உட்கார்ந்து வீணைவாசிப்பவன் யாரடா?' என்று கேட்டான். அப்போது ராமன் அவன் சிறிதும் மரியாதை தெரியாதவன் என்பதை அறிந்து பதில் ஒன்றும் சொல்லாமலிருப்பதே அவனுக்குத் தக்க தண்டனையாகுமென்று எண்ணி அவனோடு ஒன்றும் பேசாமல் வீணையை வாசித்துக்கொண்டே இருந்தான்.

அப்பால் அந்த வைசியன் முன்கேட்ட கேள்வியையே கொஞ்சம் பலத்த குரலில் ராமனைக் கேட்டான். அப்போதும் ராமன் பதில் சொல்லவில்லை. பிறகு மூன்றாவது முறையும் வைசியன் அதேமாதிரி கேட்க ராமன் பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக இருந்துவிட்டான். அப்போது வைசியன் மிக்க கோபம் அடைந்து ராமனை நோக்கி, "அடே, என்ன உன் காது செவிடா? எத்தனைதரம் உன்னைக் கூப்பிட்டாலும் நீ பதில் சொல்லாமல் இருக்கிறாயே!" என்று கேட்டான். உடனே ராமன், 'ஐயா பெரியவரே, முதலில் உமது வாயிலுள்ள சுருட்டை யெறிந்துவிட்டுவாரும். அப்பால் நான் பேசுகிறேன்' என்று சொல்ல, வைசியன் வெட்கமடைந்து தன் வழியைப் பார்த்துக்கொண்டு போனான். இதனால் மௌனமாயிருத்தலின் பிரயோசனத்தை நாம் தெரிந்துகொள்ளுகிறோம்.



## 22. எறும்புகள்.

ஈயைப்போல் எறும்பும் எப்போதும் உழைத்துக்கொண்டிருக்கும். ஒரு வளையில் ஆயிரக்கணக்கான எறும்புகள் சேர்ந்துகொண்டு வசிக்கின்றன. அவைகள் ஒற்றுமையுடன் இருந்து தங்கள் இனத்தின் நன்மையின் பொருட்டே சேர்ந்து உழைக்கின்றன. தங்களுடைய ஆகாரங்களை அவைகள்



தங்கள் வளைகளில் சேகரித்து வைத்துக்கொண்டு உணவு அகப்படாத காலத்தில் அவற்றை உபயோகித்துக்கொள்ளு கின்றன. சம்பாதிக்குங் காலத்தில் அதிகச் செலவு செய்யா மல் பொருளை மிகுத்துவைத்துக்கொள்ளும் புத்திசாலிக ளுக்கு எறும்புகளை ஒப்பிடலாம்.

எறும்புகள் பல நிறங்களிலும் பல அளவிலும் இருக்கின் றன. சில வெண்மையாகவும், சில கறுப்பாகவும், சில சிவப் பாகவும், சில கோதுமை நிறம் உள்ளனவாகவும் இருக் கின்றன.

பெரும்பாலும் எல்லாத்தேசங்களிலும் எறும்புகள் காணப் படும். உஷ்ணமான தேசங்களில் அவைகள் அவசியம் இருக் கும். எறும்புகள் மிகவும் பலமாகக் கடிக்கும்.

எறும்பு பேசாவிட்டாலும் தன்னுடைய எண்ணம் இன்ன தென்பதைப் பிறர் சீக்கிரத்தில் தெரிந்துகொள்ளும்படி செய் யும். எறும்பின் தலையில் மீசையைப்போன்ற இரண்டு நீள மான மயிர்கள் உண்டு. ஊமை மனிதன் ஒருவன் தன் அபிப் பிராயங்களைத் தன் கைகளால் சைகைகாட்டித் தெரிவிப்பது போல் எறும்பு தன் தலையிலுள்ள இரண்டு மயிர்களின் மூல மாகத் தன் அபிப்பிராயத்தை வெளியிடும். சர்க்கரையை யோ, அரிசியையோ ஓர் எறும்பு கண்டால் அது வேகமாகச் சென்று மற்ற எறும்புகளினிடம் தெரிவித்துவிடும். சிறிது நேரத்திற்கெல்லாம் கூட்டங் கூட்டமாக எறும்புகள் அங்கே வந்து மொய்த்துக்கொள்ளும்.

எறும்பினத்தைச் சேர்ந்த கரையான்கள் மரங்களைத் தின்றுவிடுகின்றன. அவைகள் ஜனங்களுக்கு மிகுந்த நஷ் டத்தை விளைவிக்கின்றன. பிறருக்குத் தெரியாமல் அவை

சுவரின் அடியிலிருந்து வீட்டின் உச்சிமேட்டின்மேல் ஏறி விடும். பிறர் வந்து பார்ப்பதற்குள்ளாக அவைகள் மரத்தை யும் உயர்ந்த பொருள்களையும் அரித்துத் தின்றிருக்கும். ஆத லால் சில சமயங்களில் வீட்டுக்கூரை தாழ்ந்துபோவது முண்டு. மரங்களுக்குத் தார் பூசி மண்ணெண்ணெயைத் தடவி விட் டால் கரையான்கள் அங்கே செல்லமாட்டா. தாரும் மண் ணெண்ணெயும் கரையானுக்குப் பரமவிரோதிகள்.

சிவப்பு எறும்பும் கோதுமை நிறமுள்ள எறும்பும் பெரும் பாலும் மாமரங்களில் ஊர்ந்துகொண்டிருக்கும். இவைகள் கடித்தால் தேள் கொட்டினாற்போல் கடுக்கும். கடித்த இட மும் வீங்கிப்போம். இவைகள் பூமியிலுள்ள வளைகளில் இராமல் மரங்களிலே இலைகளாற் கூடுகட்டிக்கொண்டு அங்கே வசிக்கும்.

எறும்புகள் முட்டையிடும்; அவைகளை வாயில் கௌவிக் கொண்டு சாரிசாரியாகப் போவதை நீங்கள் பார்த்திருக்கலாம். இவ்வாறு அவைகள் போகும்போதே சூரிய வெப்பத்தால் முட்டையிலிருந்து சிறு எறும்புகள் வெளிப்பட்டு ஊர்ந்து செல்லும்.



## 23. தேனீக்கள்.

தேனீயானது பூச்சிவகைகள் எல்லாவற்றிலும் ஆச்சரிய மானது. அன்றியும், ஊக்கத்திலும் ஞானத்திலும் மற்றெல் லாவற்றிலும் சிறந்தது. எப்போதும் அது வேலைசெய்து கொண்டே யிருக்கும். அதிக ஊக்கமுடைய ஒருவனைத் தேனீயைப்போல் உழைக்கிறானென்று உலகத்தார் சொல்லு வது வழக்கம்.

தேன்கூடு ஒவ்வொன்றிலும் மூன்று வகையான தேனீக் கள் உண்டு. அவையாவன: ராணி ஈ, வேலைசெய்யும் தேனீ, சோம்பேறித் தேனீ.

ஒவ்வொரு கூட்டிலும் ஒரே ராணிதான் இருக்கும். மற்ற ஈக்கள் அதை அதிகமாகப் பூஜித்து அதற்கு வேண்டிய உணவை அளிக்கும். அது ஆயிரக் கணக்கான முட்டை இடும்; மற்ற ஈக்களைவிட அது மிகவும் பெரியது.




சோம்பேறி ஈக்களுக்கு ஆகாரஞ் செய்வதுதான் வேலை;
மழைக்காலத்தின் தொடக்கத்திலே அவற்றை வேலை செய்யும்
ஈக்கள் கூட்டிலிருந்து துரத்த, அவை குளிரினாலும் பசியினா
லும் மாய்ந்துபோம். அவை வேலைசெய்யும் ஈக்களைக் காட்டி
லும் பெரியவை. அவற்றுக்குக் கொடுக்கு இல்லை.

வேலைசெய்யும் ஈக்களுக்குக் கூர்மையான கொடுக்கு
உண்டு. அவை மற்ற எல்லாவற்றிலும் சிறியவை. அவை
கொடுக்கினால் கொட்டும்போது அதிக வலியுண்டாகும்.
அவை மெழுகுசெய்து அதைக்கொண்டு கூடுகட்டும்: தேனை
யும் சேகரிக்கும். பூக்களிடம் பறந்துபோய் ஒவ்வொரு தேனீ
யும் ஒவ்வொரு துளியாகத் தேனைக் கொண்டுவந்து கூட்டி
லுள்ள சிறு துவாரத்திற் சேர்த்து, மெழுகினால் அதை
அடைத்துவைக்கும்.

படத்திற் காட்டியிருக்கிறபடி தேனீக்களுக்காக ஜனங்
கள் மாதிரிக்கூடு செய்துவைப்பார்கள். வைக்கோற் புரியினா
லாவது கோரையினாலாவது கூடுசெய்து தேனீக்கள் போகவர
அடியில் ஒரு சிறு சந்து விடுவார்கள். தேன் சேர்ந்ததும்
அவர்கள் தங்களுக்கு வேண்டிய அளவு எடுத்துக்கொள்வார்



கள். தேன்கூடுகட்டும் மெழுகு, தேனீக்கள் உடம்பிலேயே உற்பத்தியாகிறது. கூட்டில் அநேகம் சிற்றறைகள் உண்டு. ஒவ்வோர் அறைக்கும் ஆறு சுவர்கள் இருக்கின்றன. அந்த அறைகளிலேதான் தேனீக்கள் தேனைச் சேர்க்கின்றன. தேனீக்கள் முட்டையிலிருந்து பிறந்தவுடன் கூட்டிலே சஞ்சரிக்கும்.



## 24. இந்திய ரப்பர்.

நாம் கடிதத்தில் எழுதியதை எப்போதாவது எடுக்க வேண்டுமானால் என்ன செய்கிறோம்? ரப்பர் அல்லது இந்திய ரப்பர் என்னும் ஒரு வஸ்துவால் எழுதியதைத் துடைத்து அழிக்கிறோம். ரப்பர் என்னும் சொல்லுக்குத் துடைப்பது என்பது பொருள். அது துடை என்னும் பொருள்கொண்ட "ரப்" என்னும் ஆங்கிலேய வினைப்பகுதியாகப் பிறந்தது. அது என்ன வஸ்து? எங்கிருந்து உண்டாகின்றது.

அது அமெரிகாவிலும் பர்மாவுக்குத் தெற்கில் இருக்கும் மலேய நாடுகளிலும் உற்பத்தியாகும் ஒரு ஜாதி அத்தி மரத்தின் பால்.

அங்கேயுள்ளவர்கள் அம்மரத்தின் பட்டையில் கத்தியினால் சிறு துவாரம் செய்து அந்தத் துவாரங்களுக்கு அடியில் ஒவ்வொரு சிறு தகரக்கிண்ணத்தை வைப்பார்கள். மரத்தின் பால் கிண்ணத்தில் வடியும். ஒரு மனிதன் பகற்காலத்தில் அடிக்கடி மரங்கள்தோறும் போய், கிண்ணத்திலுள்



ளதை ஒரு பெரிய பாத்திரத்தில் சேர்த்துவைப்பான். ஒரு தினத்தில் அவன் நூறு மரங்களின் பாலே எடுக்கக்கூடும். பால், மரத்திலிருந்து வடியும்பொழுது பார்வைக்கு மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறமாகவும், தேன்போலவும் இருக்கும்.

ஒரு நூதனமான முறையாக அந்தப் பாலேச் சுண்டவைப்பார்கள். களிமண்ணேத் தட்டையாகச்செய்து உலரவைத்து அதைப் பாலுள்ள பாத்திரத்தில் தோய்த்துத் தோய்த்து வெயிலிற் காயவைப்பார்கள். அதில் ஒட்டிக்கொண்ட பால் மெல்லிய படையாக உலரும். இவ்விதமாக அநேக முறை தோய்த்துத் தோய்த்துக் காய்ச்சத் தடிப்பான படை களிமண் ஓட்டின்மேல் உண்டாகும். பிறகு ஓட்டை உடைத்து உடைத்த துண்டுகளே மேல் ஓரத்தில் துவாரஞ்செய்து அதன் வழியாக எடுப்பார்கள். அப்படி எடுத்தபிறகு நிற்பதுதான் இந்திய ரப்பர் ஆகும். இவ்விதமாய்த்தான் பாலே வெயிலிற் சுண்டவைத்து மலேய இந்திய ரப்பரைச் செய்கிறார்கள்; அதன் நிறம் வெண்மையானது.

தென் அமெரிகாவிலோ பாலே வெயிலில் காய்ச்சாமல், நெருப்புப் புகையில் காய்ச்சுவது வழக்கம். இந்தப் புகை அதைக் கறுக்கச் செய்வதால், ரப்பர் கறுப்புநிறமாக இருக்கும்.

எழுதியதை அழிப்பதற்கு மாத்திரமன்றி இந்திய ரப்பர் பலவிதமான வேலைகளுக்கும் உபயோகப்படும். அநேகவித சாமான்களுக்குப் பூச அல்லது போர்வையிட உதவும். அதை நீர்போல் உருக்கிப் பூசிக் காயவைத்த துணியில் ஈரம் இறங்காது. இந்தத் துணிக்கு நனையாத்துணி என்று பெயர். இது அங்கி தைப்பதற்கும் பாதகவசம் செய்வதற்கும் உதவும். இந்தியரப்பராற் செய்த பாதரட்சையில் தண்ணீர் ஏருது. ரப்பரைச் சூடுகாட்டி மென்மையாக்கி இஷ்டமான உருவத்தை அடையும்படி செய்யலாம். குளிர்ந்தவுடன் அந்த உருவம் மாருமல் கெட்டியாகும்.

வேறு எந்த வஸ்துக்களிலும் விசேஷமாயில்லாத ஓர் அதிசயமான தன்மை இந்திய ரப்பரில் உண்டு. ஒரு துண்டு இந்திய ரப்பரை நாம் இழுத்தால், அது அருமல் நீளும். ஓரங்குல நீளமுள்ள இந்திய ரப்பரை, நாம் சுலபமாக ஓரடி நீளத்துக்கு இழுக்கலாம். ஆனாலும், விட்டவுடன் முன்போல் ஓரங்குல அளவுக்கு வந்துவிடும். ஒரு துண்டு கயிற்றைப் பலத்துடன் இழுத்தால் அது அறுந்துபோம். சில வஸ்துக்களைக் கெட்டியாக இழுத்துக் கொஞ்சம் நீட்டலாம். விட்டவுடன் அவை மறுபடியும் முன்னிருந்த அளவுக்கு வரமாட்டா. இந்திய ரப்பர் ஒன்றுதான் இழுக்க இழுக்க அருது நீளும்; விட்டுவிட்டால், முன்னிருந்த அளவாகும். இந்த நூதனமான இயல்புக்கு நெகிழ்ச்சி அல்லது நிலைபெறுந் தன்மை என்று பெயர். வேறு பொருள்களிலுமுள்ள இத் தன்மைக்கு இப்பெயர் வழங்கும். இந்திய ரப்பரில் இந்தக் குணம் விசேஷமாக இருக்கிறது.

இந்திய ரப்பராற் செய்த பந்து ஒன்றைப் பலமாகத் தரையில் அடித்தால், அது இருபதடிக்குமேல் உயரமாக எழும்பும். ஒரு சுவரில் எறிந்தால், அது அதில் மோதி வெகுதூரம் திரும்பும். இந்த நியாயம்பற்றியே குழந்தைகள் அடித்து விளையாடும் பந்துகளை இந்திய ரப்பராற் செய்கிருர்கள். இவற்றில் சில உள்ளீடில்லாமலும் சில கெட்டியாகவும் இருக்கும். இத்தேசத்துப் பிள்ளைகள் காற்சட்டை போட்டுக்கொண்டு அது நழுவாதிருக்க அதன்மேல் ஒரு கயிற்றை இடுப்பில் கட்டிக்கொள்வார்கள். ஆங்கிலேயப் பிள்ளைகள் ரப்பரால் செய்த கச்சையை இடுப்பில் கட்டுவார்கள்.

துவிசக்கரத்தைச் சுற்றியிருக்கும் கட்டு ஒவ்வொன்றும் இந்திய ரப்பரால் செய்யப்பட்டதே. சில கட்டுக்கள் காற்றை யன்றி வேறோர் உள்ளீடுமில்லாமல் இருக்கும். சவாரி செய் பவனுக்கு ஆட்டமும் அசைவும் இல்லாமலிருக்கவே இவ் விதம் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த நியாயம்பற்றியே வண்டிச் சக்கரங்களுக்கும் இதேவிதமான கட்டுக்களை இப் போது போடுகிறார்கள்.

இவ்வித வண்டிகள் தெருக்களில் ஓடும்பொழுது சத்தம் செய்யாமலும் உள்ளே யிருப்பவர்களுக்கு வேதனை கொடா மலும் இருக்கும்.

ரப்பருக்கு உள்ள மூன்று குணங்களும் என்ன? முதலா வது தண்ணீர் இறங்காமை; இரண்டாவது நெகிழ்ச்சித் தன்மை; மூன்றாவது வெப்பத்தினால் இளகி வேறு உருவம் பெற்று உஷ்ணம் தணிந்தவுடன் கெட்டிப்படுதல். இவற்றால் நமக்கு உண்டாகும் பயன்கள் மிக அதிகம்.



## 25. பழக்க வழக்கங்கள்.

ஒழுக்கங்கள் என்பனவெல்லாம் யோசிக்குமிடத்துப் பழக்கம் என்றதில் அடங்கும். ஆகையால் பழக்கங்களெல் லாம் சேர்ந்து உருவெடுத்தாற்போன்றவனே மனிதன் என்று சொல்லலாம். ஒருவனுடைய வழக்கமான செயலும் குண மும் அவனுடைய கூறுகள் என்று சிலர் கூறியிருக்கின்றனர். வாழ்நாள் முழுவதும் கழுத்தில் ஓர் இருப்புவளையம் அல்லது காலிற் சங்கிலி போட்டுக்கொள்ளவேண்டும் என்று ஒரு கட் டளை யிருந்தால், அது நமக்கு அல்லும் பகலும் எவ்வளவு துன்பம் தரும்? அதை ஒழிக்க வழியில்லை என்ற எண் ணத்தினால் நாம் மனம் அழிந்து வருந்துவோமல்லவா? ஆனா லும் அதைப் பொறுத்தாலும் பொறுக்கலாம். சில வழக்கங் கள் ஏற்பட்டுவிட்டால் அவற்றிலிருந்து மீள்வது அரிது: வழக்கங்கள், அவற்றிலும் தீயவழக்கங்கள் வெகு சீக்கிரத்தில் ஏற்பட்டுவிடும். எந்தச் செய்கையும் தொடக்கத்தில் அற்பமா யிருக்கும். அதன் பலாபலம் இத்தன்மையது என்று முதலில் தெரியமாட்டாது. நாளடைவிலேதான் தெரியும்; ஒற்றைப்

புரிகளை முறுக்கி முப்புரியாகத் திரித்து அவற்றால் ஆனது தான் நங்கூரவடம் என்பது; பெரிய கப்பலும் அந்த வடத் தால் கட்டுண்டு நிற்கும். ஒருவன் அடைந்த பழக்க வழக் கங்களும் முதலில் புரியைப்போல் அற்பமாயிருந்தாலும், பிறகு அவை அவனை நங்கூரவடம்போலத் தம் வசமாக்கி விடும். அவற்றை நீக்க அவனால் ஆகாது. ஒவ்வொரு மாணாக்கனும் ஒவ்வொரு வழக்கத்தை அறிந்தோ அறியா மலோ அடைகிறான். அவன் காலம் வேலை எண்ணம் உணர்ச்சி எல்லாம் ஒரே மார்க்கத்தில் செல்லும். அந்த வழக் கம் நல்லதாயினும் தீயதாயினும காலக்கிரமத்தில் அவன் அதற்கு உட்பட்டுவிடுவான். நெடுங்காலம் கைதியாக இருந்த வயோதிகன் ஒருவனைச் சிறையினின்றும் விட்டபொழுது, அவன் "நான் சிறையிற் பழக்கிக்கொண்ட பழக்க வழக்கங் களை மாற்ற முடியாது; மாற்றினால் செத்தேன்; என்னை மீண் டும் அந்த இடத்தில் அடைத்துவைத்தால் உங்களுக்குப் புண் ணியம் உண்டு" என்று வருந்திக் கேட்டுக்கொண்டதாக ஒரு கதை சொல்வதுண்டு.

ஒவ்வொருவரும் ஏதோ ஒரு பழக்கத்தைப் பயிற்சி செய் கிறார். அது, எல்லாரும் நல்லதென்று ஒப்புக்கொள்ளத் தக்க தாயும், வாழ்நாள் முழுவதிலும் நன்மையையும் சந்தோஷத் தையும் தரத்தக்கதாயும் இருக்கவேண்டும்.

நல்ல வழக்கத்தைப் பயிற்சிசெய்ய யாதும் பயமின்றித் தொடங்கலாம்: தொடங்குங்கால் துன்பமாயிருந்தாலும், முயலமுயல இன்பம் தரும். தினந்தோறும் இன்ன வேலையை இன்ன வேளையில் செய்யவேண்டும் என்ற உறுதியுடன், இடையறாது செய்துவந்தால் செய்வதும் எளிதாகும்; இன்ப மும் உண்டாகும். எவ்வித வழக்கங்களும் இவ்வாறே உண் டாகின்றன.

மாணாக்கருக்கு ஏற்றவையான பழக்க வழக்கங்கள் இவை என்றும், அவற்றை அடைதற்கு அனுசரிக்கவேண்டிய விதி கள் இவை என்றும், கீழே சொல்லப்படுகின்றன:—

1. இன்ன வேலையை இன்ன வேளையில் இவ்வாறு செய்யவேண்டுமென்று மனத்தில் நிச்சயித்துக்கொண்டு அவ் வேலையை அவ்வேளையில் அவ்வாறு செய்யவேண்டும். இந்த

விதியைத் தவருது அனுசரித்துவந்தால், ஒரு தினத்திலே நாம் செய்துமுடிக்கும் வேலேயே நமக்கு ஆச்சரியத்தைத் தரத்தக்கதாயிருக்கும்.

2. பின்னிடாது முயற்சிசெய்யும் வழக்கத்தைப் பயிற்சி செய்க. 'நான் இயல்பிலே சூக்ஷ்ம புத்தியுள்ளவன்; சிரமம் இன்றி எதுவும் தாணுகவே வந்துவிடும்' என்னும் கேட்டுக்குக் காரணமாகிய எண்ணம் மனத்திற்கு புகுந்திருந்தால் அதை விரைவில் ஓட்டிவிடுக. முயற்சியும் ஊக்கமுமே சகல சம்பத்துக்கும் உண்மையான காரணம் என்பதை நம்பிக் கடைப் பிடிக்கவேண்டும். இந்த இரண்டும் இல்லாதவர் வறுமை யடைவதோடு உள்ளவற்றையும் இழந்துவிடுவர்.

சிறு பயன் கருதிச்செய்யும் இடையரு முயற்சியே பெரும் பயன் பெறுதற்குத் தப்பாத மார்க்கம். தாளாண்மை ஒன்றே எவ்வளவு அதிசயப்படத்தக்கது! தாளாண்மை உடையவன் பெறுதற்கரியது ஒன்றும் இல்லே. முற்காலத்து நூலாசிரியர்கள் எத்தனே அரிய பெரிய நூல்களே எழுதிக் குவித்திருக்கின்றனர்! அதற்கு உண்மையான காரணம் என்ன? தேக சிரமமும் உள்ளக் கிளர்ச்சியுமே. முயற்சி என்றது பரபரப்பன்று; பலவேலேயில் கையிடுவதுமன்று. அவசரத்தோடும் பரபரப்போடும் நோக்கமின்றி உழைப்பவன் யாதொரு பயனேயும் அடையமாட்டான்.

ஒரு மாணுக்கனுக்குச் சோம்பலேப்போலக் கேடுதருவது வேறென்று இல்லே. அதைப்போல அடைதற்கு எளியதும், போக்கற்கு அரியதும் வேறு இல்லே. சோம்பேறி யாதொன்றும் செய்ய முடியாதவனுகி "ஓடுவதைக்காட்டிலும் நடப்பதும், நடப்பதைக்காட்டிலும் அசையாது நிற்பதும், நிற்பதைக்காட்டிலும் உட்காருவதும், உட்காருவதைக்காட்டிலும் படுத்துக்கொள்வதும் நல்லது" என்னும் ஒரு விதியை ஏற்படுத்தி அனுசரிப்பான். தேர்ந்த சோம்பேறியைப்போலப் பரிதாபத்துக்கு ஆளாயிருப்பவன் வேறு ஒருவனுமில்லே. உன்மத்தருக்கு ஒருவகைக் களிப்பு உண்டு என்றும், அது அவருக்குத்தான் தெரியும் என்றுஞ் சொல்லுகிருர்கள். அது போலவே சோம்பேறிகள் துன்பமும் சோம்பேறிகளுக்கே புலப்படும்.

3. விடாமுயற்சியில் பழகவேண்டும். ஆராய்ந்துகையிட்ட வேலையை நாளுக்குநாள் வாரத்துக்குவாரம் இடையருது தொடர்ச்சியாகச் செய்வதே விடாமுயற்சியாம். 'இன்ன இன்ன பெரியோர் இன்ன இன்ன முறையாய் உழைத்துப் பிரசித்தி பெற்ருர்; நானும் அவ்வாறு முயன்ருல் கீர்த்தி அடையலாம்' என்று ஒருவன் எண்ணுமல் ஒரு வேலையை மேற்கொண்டு சில தினத்தில் அதில் நேரிடும் அற்ப சங்கடத்தால் அதைக் கைவிடுவான்.

இதற்குத் திருஷ்டாந்தம்:—ஒருவன் பழைய இலக்கியங்களைக் கற்கத் தொடங்கினுன்; சிலநாள் கழியுமுன், ஒரு நண்பன் வந்து அவனைப்பார்த்து, 'பழைய விஷயங்களையும் வழக்கிலிருந்து கழிந்த சொற்களையும் படித்து ஏன் காலத்தை வீணே கழிக்கிருய்? புதிய நூல்களையும் புதிய விஷயங்களையும் கற்பதே நன்று' என, அவன் அதைவிட்டு உயர்ந்த கணிதசாஸ்திர நூல்களைக் கற்கத்தொடங்கினுன். இதை அறிந்து வேருெருநண்பன் போய், "நீ ஒரு சர்வகலாசாலையில் கணித பண்டிதனுகும் எண்ணம் கொண்டால் இந்த நூல்களைக் கற்கலாம். உன் வாழ்நாளுக்கு உரிய காரியங்களுக்கு நாம்எல்லாரும் கற்றிருக்கிற கணிதஞானமேபோதும். அதற்கு மேற்பட்டவையெல்லாம் வீணுகமுடியும்" என, அவன் அதற்கும் இணங்கி வேருென்று கற்கத்தொடங்கினுன். இவ்வாறு அவன் வாழ்நாள் முழுவதையும், ஒன்றைத் தொடங்குவதும் பிறகு அதைவிட்டு வேருென்றைத் தொடங்கி யாதொரு பயனுமின்றிக் கழித்துவந்ததுமன்றி, எந்தத் தொழிலிலும் பிரவேசித்துப் பயன்பெற முடியாதவனுகப் போய்விட்டான். விடாமுயற்சியினுல் சிலர் ஆச்சரியமான காரியங்களைச் சாதித்துப் பெரும் பெயர் பெற்றிருக்கிருர்கள். ஸ்வீடன் (Sweden) தேசத்து அரசன் ஒருவன் பலமுறை இருபத்துநான்குமணி நேரம்வரையில் கீழே இறங்காமலே குதிரைமேல் சவாரி செய்வான். அவனுடன் சென்ற உத்தியோகஸ்தர்கள் களைத்து நின்றுவிட, அவன் தனித்துப் பிரயாணம்செய்வான். இவ்வாறு தன் ராஜ்யம் முழுவதையும் பார்த்துவருவான். இப்படியே அவன் பிரயாணஞ்செய்தபோது ஒருநாள் குதிரை களைத்துப்போய் விழுந்துபோக, அவன் சிறிதும் தாமதியா

மல் சேணம், துப்பாக்கி முதலியவைகளைக் கட்டித் தன் முதுகில் போட்டுக்கொண்டு பாதசாரியாக அடுத்த சத்திரம் அடைந்து, அங்கே தன் மனத்துக்கேற்ற குதிரை ஒன்று நிற்கக் கண்டு, உடுப்பைப் போட்டுக்கொண்டு அதில் சவாரி போகத் தொடங்கினன். சொந்தக்காரன் உரக்கக்கூவி "என் குதிரையை ஏன் களவாடிக்கொண்டு போகிருய்?" என, அதற்கு அரசன் 'யான் சேணம் முதலியவற்றைச் சுமக்க முடியாமையால், அப்படிச் செய்தேன்' என்றான். பிறகு சொந்தக்காரன் அரசனை வெட்டுவதற்கு வாளை உருவினவளவில், பக்கத்தில் நின்றவன், 'நீ வெட்ட எண்ணினவன் அரசன்; எச்சரிக்கை' என்று சொல்லவே சண்டை ஒழிந்தது. அந்த அரசன் விடாமுயற்சிக்கு இது ஒரு திருஷ்டாந்தம். இவ்வாறு ஒரு மாணுக்கன் சலியாமுயற்சியை மேற்கொண்டு இடையூறுகளுக்கு அஞ்சாமல் நடந்துவந்தால், சில வருஷத்தில் எல்லாரும் மெச்சும்படி மேன்மையான பதவியை அடைவான் என்பதற்குச் சந்தேகமில்லை.

4. குறிப்பிட்ட காலத்தில் எந்தவேலையையும் செய்யப் பழகவேண்டும். குறித்த வேலையைக் குறித்த வேளையில் எவனும் செய்யவேண்டுமானுல் செய்யலாம். ஆனுலும், தம்மால் ஆனமட்டும் முயன்று அவ்வாறு செய்யும் வழக்கம் அடைந்தோர் சிலரேயுளர்; அவ்விதமான பழக்கமுள்ள ஒருவன், அது இல்லாதவனைவிட இருமடங்கு வேலையை மிகவும் சுலபமாகவும், தனக்கும் பிறர்க்கும் திருப்தி உண்டாகும்படியும் செய்வான். இங்கிலாந்தில் முன்னே இருந்த லார்ட் சான்ஸெலர் ஒருவர் ஒரு பெரிய ராஜ்யபாரத்தை வகித்துக்கொண்டும், பிரபுக்களது மகாசபையின் தலைமையை ஏற்றுக்கொண்டும், சட்டநிபுணர்கள் தினந்தோறும் சொல்லும் ஆலோசனை அபிப்பிராயங்களை அமைதியாகக் கேட்டுக்கொண்டும் இருந்தார். அப்படி இருந்தாலும் உபயோகமான புஸ்தகங்களை அச்சிட்டுப் பிரசுரஞ்செய்யும் பத்துச் சங்கங்களுக்குத் தலைவராயிருந்து, அந்த அந்த வேலைகளைக் குறைவறச்செய்யவும், நூல்களின் குணதோஷங்களை வேண்டும் சமயங்களில் எடுத்தெழுதிப் பிரசுரிக்கவும் அவருக்கு நேரம் கிடைத்தது. மேலும் அந்தச் சங்கங்கள் சபைகூடும் காலத்தில் அவர் ஒரு நாளும் தவருமலும் குறித்த வேளைக்கு நொடிப்பொழுதும்

தப்பாதும் சபையார் மனங்குளிரத் தமது ஆசனத்தில் வீற்றிருப்பார். தேகபலம் மனோபலம் இரண்டையும் அவர் தம் வசப்படுத்தி அந்த வேலைகளைக் குறைவற நிறைவேற்றியது காலப்போக்கில் அவருக்கிருந்த பயிற்சியாலேயே. 'மேலே வியந்துகூறிய பயிற்சி அற்பருக்குத் தக்கது; உயர்ந்த குணங்களை யுடையவர்களுக்குத் தகாது; இழிவுண்டாக்கும்' என்று சிலர் சொல்வர். அப்படி வீண்வார்த்தை கூறுவோர் தாம் சொல்வது இன்னதென்று அறியார்போலும். குணசீலர் என்று அவர் கூறியவர் காலப்போக்கை அனுசரியாதுபோனால் அத்தன்மையர் ஆகவே ஆகார்.

5. "வைகறைத் துயில் எழு" இந்த விதியை அல்லும் பகலும் மனத்தில் பதிந்து வைத்துக்கொண்டு அதை வழக்கத்தில் கொண்டுவரவேண்டும். அதிகாலையில் தூக்கத்தை விட்டெழும் வழக்கமுடையவர்களே தீர்க்காயுள் பெற்றவர்கள்; விசேஷமாகக் கீர்த்தி அடைந்தவர்கள்; அவர்களை மெச்சாதார் யார்? நேரஞ்சென்று படுக்கையைவிட்டு எழுந்திருந்தால், நாம் துன்பம் அடைவதோடு நாம் செய்யவேண்டிய வேலையும் அலங்கோலமாகிவிடும். காலையில் வழக்கமாய்த் தூக்கத்தைவிட்டு எழாதவன், நாள் எல்லாம் படாத பாடுபட்டாலும், இரவில் படுக்குமுன் வேலையை முடிக்க மாட்டான் என்று ப்ராங்லின் என்பவரும், காலையிற் படுக்கையிற்கிடக்கும் வழக்கமுடையவன் புகழ்படைத்ததை ஒரு பொழுதும் தாம் கண்டதில்லை என்று டீன் ஸ்விப்ட் என்பவரும் எழுதியிருக்கிறார்கள்.



"வைகறை யாமம் துயிலெழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை."

6. நாம் பார்க்கும் ஒவ்வொருவரிடத்திலும் உள்ள நல்ல வழக்கங்களைக் கற்றுக்கொள்ளவேண்டும். இந்த விதியைச் சட்டை செய்வதால் வரும் நன்மையும், அசட்டை செய்வதால் வரும் தீமையும் யாவரும் அறிந்தனவே. எல்லோரும் பெரும்பாலும் இந்த விதியை அனுசரித்தாலும், இதை வழக்கப்படுத்திக் கொண்டவர்கள் மிகவும் சிலரேயுளர். பெரும்பா

லார், பிறர் சொல்வதைக் கேட்டு, அதனல் வரும் பயனை அடையாது போவர். செவியிற் பட்டதை மனத்தில் அமைத்து யோசித்துத் தாங்கள் அறிந்தவற்றோடு ஒப்பிட்டு நல்லவற்றைக் கைக்கொண்டு தீயவற்றை ஒழிக்க முயலவேண்டும். "ஒருவன் நிலைமை எப்படியிருந்தாலும் அவனுடன் சிறிது நேரமாவது சல்லாபம் செய்து, எனக்கு முன் தெரியாத விஷயங்களை நான் தெரிந்துகொள்ளாத வேளை இல்லவே இல்லை" என்று ஒரு பெரிய வித்துவான் அறிவுடையோர் யாவரும் வியப்பக் கூறியிருக்கிறார்.

7. ஒவ்வொன்றையும் செவ்வனே செய்யும் வழக்கத்தை அடையவேண்டும். "செய்வன திருந்தச் செய்" என்பது பெரியோர் வாக்கு. ஒரு பெரிய நூலாசிரியர் தாம் எழுதியதை மறுபடியும் பார்வையிடாமலே அச்சுயந்திரசாலைக்கு அனுப்புவாராம். அது வழக்கத்தின் பயன் அல்லவா? அவர் வாக்கியம் எழுதும்பொழுது ஆய்ந்தோய்ந்து எழுதுவார்; எழுதினதில் குற்றம் ஒன்றும் இராது. மாணுக்கர் பெரும்பான்மையோர் பொருளையும் சொன்னடையையும் பொறுமையுடன் யோசியாது அவசரப்பட்டு எழுதுவார்கள். பால்யர் ஒருவரிடமாவது பொறுமையென்பது விசேஷமாக இல்லை. மாணுக்கர் ஒருவரோடொருவர் பேசிக்கொள்வது 'எவ்வளவு நன்றாகச் செய்தாய்?' என்பதன்று; 'எவ்வளவு சீக்கிரத்தில் முடித்தாய்?' என்பதேயாம். அது கெட்ட வழக்கம். ஒருவன் மற்ற விஷயங்களில் எவ்வளவு பயிற்சி அடைந்திருந்தாலும், திருத்தமாக ஒன்றைச் செய்துமுடிக்கும் வழக்கம் இல்லாவிட்டால் அது குறைவுபடும்.

8. அடக்கத்தை மேற்கொள்ளவேண்டும். அடக்கம் என்றால் மனம் மொழி மெய்கள் தீயவழியிற் செல்லாமல் நல்ல வழியிற் செல்லும்படி பார்த்துக்கொள்ளுதல். ஒருகால் விரும்பவும் ஒருகால் வெறுக்கவும் தக்கவர்கள் எண்ணிறந்தோர் இருக்கின்றார்கள். அவர்களிடம் குணம் என்றது ஒன்றும் இல்லை. நம்மையே அடக்கி வசப்படுத்தி ஆளுவது எளிதன்று. ஆயினும், அதைப்போல அரியது ஒன்றும் இல்லை. தன்னை அடக்கினவனே அருஞ்சூரன் எனப்படுவான். சிலர் தங்கள் சிநேகிதரோடு யோசனையின்றி ஆத்திரப்பட்டுப் பே

சும் வழக்கத்தை அடைகிறார்கள். இதைத் தவிர்ப்பதற்கு நம்மால் ஆனமட்டும் முயலவேண்டும்.

9. தீர்க்காலோசனைசெய்து முடிவுசெய்யும் வழக்கத்தை நாடவேண்டும். சுத்த மனத்துடன் பலகால் பலவழிகளாலும் விசாரித்தறிந்து ஒரு காரியத்தில் துணியவேண்டும். பெரும்பான்மையோர் மனிதரையும் அவர் செய்கையையும் மேலோட்டமாகப் பார்த்துத் தமது அபிப்பிராயத்தை வெளியிடுவர். அது சரியென்று சொல்ல நியாயமில்லை. ஒருவனிடத்தில் அல்லது ஒரு பொருளினிடத்தில் முன்னுறத் தப்பெண்ணத்தை வைத்துக்கொண்டு ஆராய்ந்தால், உள்ள குணம் தோஷமாகவும், தோஷம் குணமாகவும் புலப்படும். உள்ளவாறுதோன்றாது. இவ்வாறு ஆராயும் குணம் உடையோர் மிகச் சிலர்.

10. பெற்றோர் சிநேகர் பந்துக்கள் முதலியவர்களை நடத்தும் முறையும் வழக்கத்தில் அமையவேண்டும். தூரதேசத்தில் வாசஞ்செய்ய நேரிட்டால், அவ்விடத்துள்ள நூதனமான காட்சிகளைப் பார்ப்பதிலும், புதிய நண்பரைச் சேர்ப்பதிலும் சிலர் மனஞ்செலுத்திப் பெற்றோரை மறந்துவிடுவார். பெற்றோர்களோ, அவரது அறையையும் உடுப்பையும் சாமான்களையும் அனுதினமும் பார்த்து அவரை நினையாதிரார். அவர்கள் உடம்பு வீட்டிலிருந்தாலும் உயிர் மக்களிடத்தில் இருக்கும். இவ்வாறு துயர் உறும் பெற்றோருக்கு நாம் செய்யக்கூடியது ஒன்றுண்டு. அதாவது அயலிடங்களுக்குப்போனால் இன்ன தினத்தில் நம் கடிதம் அவர்களுக்கு வரும் என்ற நம்பிக்கையை உண்டாக்கி அத்தினத்தில் அவர்களுக்குச் சேரும்படி எழுதுவதே. புதியவரைக் கண்டு பழையவரைக் கைவிடாமல் இருக்கவேண்டும்.



## 26. கடன் வாங்கலால் விளையும் தீமைகள்.

இந்தியாவிலுள்ள ஜனங்கள் பெரும்பாலும் கடன் வாங்குவதற்குப் பின்வாங்குவதேயில்லை. சிலர் தாங்கள் முன்பு வாங்கியிருந்த கடனைத் தீர்ப்பதற்காகப் புதிய மனிதர்களிடம் கடன் வாங்குவதிலேயே தங்கள் காலத்தை விசேஷமாகச் செலவு செய்கிறார்கள்.

கடனுக்கு முக்கிய காரணம் கலியாணங்களால் ஏற்படும் செலவே. அப்பேர்ப்பட்ட சமயங்களில் ஜனங்கள் முன்பின் யோசியாமல் தங்கள் மனம் போனவாறு ஏராளமான பொருளைச் செலவிடுகிறார்கள். சில வருஷங்களுக்குப் பிறகுதான் கடன்காரர்களுடைய துன்பத்துக்கு அவர்கள் ஆளாகிறார்கள். கடன் வாங்கும்போது சில ஜனங்களுக்கு அதன் தீமைகளே தெரிவதில்லை. தாங்கள் வாங்கிய கடனை இன்ன விதமாகப் பின்பு அடைக்கலாம் என்ற யோசனையில்லாமல் அநேகர் கடன் வாங்குகிறார்கள். விவசாயம் செய்பவர்களில் பலர் கடனாளிகளாக இருக்கிறார்கள். விதை விதைக்குங் காலத்திலேயே அநேகர்களுக்குக் கடன் ஏற்பட்டுவிடுகிறது. விவசாயம் நடக்கும்போது தங்களுடைய காலக்ஷேபத்துக்காக அவர்கள் பின்னும் கடன் வாங்குகிறார்கள். கடைசியில் விளைவு வந்தவுடன் கிடைத்த வரும்படி முழுவதையும் கடனுக்காகவே கொடுக்கும்படி ஏற்பட்டுவிடுகிறது. பல உத்தியோகஸ்தர்கள் எந்த விதத்திலாலோ கடன் வாங்கிவிட்டுப் பிறகு தங்களுடைய சம்பளத்திலிருந்து மாதந்தோறும் ஒரு பகுதியைக் கடனுக்காகக் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். உள்நாட்டில் இருப்பவர்கள் மிகவும் கடுமையான வட்டிக்குக் கடன் வாங்குகிறார்கள்.

கையில் ஒன்றுமில்லாதவனே கடனாளியாக ஆகிறபடியால் நல்ல வரும்படி வரக்கூடிய வியாபாரத்தை அவனால் நடத்தமுடியாது. அதற்கு மூலதனம் வேண்டுமல்லவா? வியாபாரத்தில் தவணைசொல்லிச் சாமான்களை வாங்குபவர்களுக்கு வியாபாரிகள் மிகவும் அதிகமான விலையைப்போடுகிறார்கள். சில சமயங்களில் ஒரு கடனாளி தனக்குக் கடன் கொடுத்தவனைப் பார்ப்பதற்கே அஞ்சி ஒளிந்துகொள்ளுகிறான். தன்னுடைய வீட்டையும் பந்துக்களையும் மற்றும் தனக்குச் சொந்தமான பொருள்களையும் கடனுக்காகப் பயந்து துறந்துவிட்டு அவன் தேசாந்தரம் போகும்படியும் நேரிடுகிறது.

திருப்பிக் கொடுப்பதற்கு வகையில்லாமல் ஒருவன் கடன் வாங்கினாலும் அல்லது கடன் வாங்கினபிறகு குறிப்பிட்ட காலத்தில் அதைத் திருப்பிக்கொடுக்க ஒருவிதமான முயற்சியும் எடுத்துக்கொள்ளாவிட்டாலும் கொடிய பாவமாகும். கட

வுளால் இப்பேர்ப்பட்ட கடனாளி ஒரு திருடனாகக் கருதப் படுவான்.

கடனாளிகள் பெரும்பாலும் பொய் சொல்லுவதற்கு அஞ் சமாட்டார்கள். அடிக்கடி கடன் வாங்கும் வழக்கத்தையே வைத்துக்கொண்டிருப்பவன் பெரும்பாலும் கண்ணியக் குறைவுள்ளவனாகவே இருப்பான். குறிப்பிட்ட காலத்தில் திருப்பிக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டுக் கடன் வாங்கு பவன் தன் வாக்கை உள்ளபடி நிறைவேற்றுகிறதில்லை. முத லில் பொய்க்காக ஏதேனும் ஒரு காரணத்தைச் சொல்லி அவன் தப்பித்துக்கொள்வான். பிறகு ஒவ்வொரு சமயத் திலும் ஓவ்வொரு பொய்யான காரணத்தையே சொல்லித் தன் காலத்தைக் கழிக்கிறான். திருடக்கூடாதென்பதும் பொய் சொல்லக்கூடாதென்பதும் கடன் வாங்கக்கூடாதென்பதும் கடவுளால் நமக்கிடப்பட்ட கட்டளைகள்.

ஒவ்வொருவனும் கடன் வாங்காமலிருப்பதற்குத் தன் னால் ஆனமட்டும் முயலவேண்டும். நமக்கேற்படும் கஷ்டங் களைப் பொறுமையுடன் அனுபவித்தாலும் அனுபவிக்கலாமே யல்லாமல் அவைகளுக்காகக் கடன் வாங்கக்கூடாது. கடன் வாங்கினால் கொடுக்கவேண்டிய கடுமையான வட்டியை உத் தேசித்து நம்முடைய செலவைக் குறைத்துக்கொள்ளும்படி நேரிடுகிறது. வட்டிக்காகக் கொடுக்கவேண்டிய பணத்தைத் தனியே கணக்கிட்டுப்பார்த்தால் அது ஒருவனுடைய அதிகப் படியான செலவுக்குப் போதுமானதாக இருக்கும்.



## 27. தங்கக் கோயில்.

இந்தியாவில் மதஸ்தாபனஞ் செய்த பெரியோர்களில் அநேகர் கிறிஸ்தவாப்தம் பதினைந்தாம் நூற்றாண்டில் அவத ரித்தார்கள். அவர்களுள் ஒருவரான நானக் என்பவர் பஞ் சாபில் ஜனித்தார். அவர் மகம்மதியர்களையும் ஹிந்துக்களை யும் ஒன்றுபடுத்தி ஒரு புதிய மதத்தை நிலைநாட்டினார். இந் தப் புதிய மதத்தைக் கொண்டவர்கள் சீக்கியர்கள் என்று பெயரிடப்பட்டார்கள். இந்த மதத்தைப்பற்றி நானக் எழு தியிருக்கும் கிரந்தத்தை, 'கிரந்தாஸாகிப்' என்று சொல்லு

வார்கள். அது பஞ்சாபிலுள்ள தங்கக் கோயிலில் வைக்கப் பெற்றிருக்கிறது.

சீக்கியர்களுக்கு 'அமிருதஸரஸ்' என்பது ஒரு சிறந்த புண்ணியக்ஷேத்திரம். அது பஞ்சாபின் தலைநகரமாகிய லாகூருக்கு முப்பத்திரண்டு மைல் தூரத்தில் ராவி, பியாஸ் என்னும் இரண்டு நதிகளுக்கும் நடுவேயிருக்கிறது. சீக்கியர்களுடைய நான்காம் குருவான இராமதாசர் என்பவரால் அந்த நகரம் கட்டப்பட்டது. அந்தப் பட்டணத்தில் மிகவும் அழகான ஓர் ஏரியையும் அவர் வெட்டுவித்தார் அதில் உள்ள தீர்த்தம் படிகம்போல் தெளிவாகவும், அமிருதம் போல் ருசியுள்ளதாகவும் இருந்தமையினாலேதான் அந்த நகரத்துக்கு "அமிருதஸரஸ்" என்னும் பெயர் இடப்பட்டது.

சீக்கியர்களுடைய மதம் மிக்க மேன்மையடைந்து பரவி வருவதைக் கண்ட மொகலாய சக்கரவர்த்தியான ஔரங்கசிப் என்பவர் அவர்களுடைய குருவாகிய பகதூர் என்பவரைக் கொலைசெய்வித்தார்.



அமிர்தசரஸிலுள்ள சீக்கியர்களுடைய ஆலயம்.

பிறகு குருகோவிந்தென்பவர் சீக்கியர்களுக்கு ஆசாரியரானார். அவர் தமது சிஷ்யகோடிகளுக்குத் தேகதிடமுண்டா குமபடி அருள்புரிந்து அவர்களைச் சிறந்த யுத்தவீரர்களாகச்

செய்தார். மொகலாயர்கள் வரவர க்ஷீணத்தையடையவே சீக்கியர்கள் மிக்க பிரபலத்தையடைந்து மகம்மதியர்களை நாட்டினின்றும் துரத்தி ராஜ்யத்தைக் கைப்பற்றிக்கொண்டார்கள். இதனைக் கேள்வியுற்ற ஆமதுஷாவின் ராணியார் ஒரு பெருத்த படையுடன் பஞ்சாபிற்குச் சென்று அங்கிருந்த தங்கக்கோயிலை யிடித்து மிகவும் அழகான ஏரியைத் தூர்த்து விட்டு, ஆயிரக்கணக்கான பசுக்களை வதைசெய்து, கோயிலில் இருந்த விலையுயர்ந்த ஆபரணங்களையும் பொருள்களையும் கொள்ளையடித்துக் கொண்டுபோனார். ஆனாலும் சீக்கியர்கள் தைரியத்தைவிடாமல் ஒரு பெருத்த சேனையைத் திரட்டினார்கள். சேனைவீரர்கள் யாவரும் வருஷந்தோறும் வைசாக பௌர்ணிமையிலும் தீபாவளி தினத்திலும் சபைகூடிப் பகைவர்களை அழிப்பதற்கு வேண்டிய யோசனைசெய்வது வழக்கம். அதற்கு, 'குருமந்திரம்' என்று பெயர். சீக்கியர்கள் மிகுந்த தைரியத்துடன் அடிக்கடி சண்டைபோட்டு வந்து கடைசியில் ரஞ்சிதஸிங்க் என்பவர் காலத்தில் சுயேச்சையை யடைந்தார்கள்.

தங்கக் கோயில் மிகவும் அழகாகவும், சூரியவெளிச்சத்தில் காந்தியை வீசிக்கொண்டும் இருப்பதால் அதில் ஏராளமான ஐசுவரியம் நிரம்பி யிருந்திருக்குமென்று சொல்வதற்கு என்ன தடை! அந்த ஆலயம் அமிருதஸரஸ் நகரத்தின் மத்தியில் அமைந்திருக்கிறது. சாதாரணமாக அதனை ஹரிமந்திரம் என்றும் தர்பார்ஸாகிப் என்றும் எல்லாரும் சொல்லுவார்கள். அதைச் சுற்றிலும் ஏரி இருக்கிறது. ஏரியைச் சுற்றிலும் அழகான வெள்ளித் தகடுகளும், வெள்ளைச் சலவைக்கற்பீடங்களும் உள்ளன. ஆலயத்திற்குப்போகும் வழியானது சலவைக்கற்களாலேயே கட்டப்பட்டிருக்கிறது. கோயிலின் கோபுரவாயில் மிகவும் அகலமாக இருக்கும். கோபுரத்தின் இரண்டு பக்கங்களிலும் பொன்னாற் செய்த இரண்டு கொடிகள் அசைந்துகொண்டிருக்கும். யுத்தம் நிகழும்போது சீக்கியர்கள் இந்தக் கொடிகளை முன்னே தாங்கிக்கொண்டு பகைவர்களை நோக்கிச் செல்லுவார்கள். ஆகையால் சீக்கியர்கள் இந்தக் கொடிகளை மிகவும் ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வருகிறார்கள்.

வழியைக்கடந்து நாம் கோயிலுக்குள்ளே சென்ருல் ஒரு பாலம் காணப்படும். அது சலவைக்கற்களால் கட்டப்பட்டுள்ளது. அதன் இரண்டு பக்கங்களிலும் தங்க விளக்குகள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருக்கும். ராத்திரி வேளைகளில் அவற்றை ஏற்றும்போது பார்த்தால் கண்ணுக்கு அளவற்ற ஆனந்தம் உண்டாகும்.

கோயிலுக்கு இரண்டு உப்பரிகைகள் இருக்கின்றன. ஆலயம் நாற்பத்தைந்து சதுர அடி விஸ்தீரணமுள்ளது. பார்வைக்கு அது ஒரு பெரிய சதுரமாக இருக்கும். மந்திரம் முழுவதிலுமே பொன் நிரம்பியிருக்கும். ஆலயத்தின் ஒவ்வொரு பக்கத்திலுமுள்ள வேலைப்பாடுகள் எல்லாம் பழைய காலத்துச் சிற்பிகளின் திறமையை நன்கு காட்டுகின்றன. ஆலயத்தின் இரண்டு உப்பரிகைகளிலும் பற்பல அறைகள் உண்டு. மேல் உப்பரிகையின் மத்தியபாகம் திறப்பாக இருக்கும். அதில் ஒருவன் ஏறி நின்ருல் ஆலயத்தினுள்ளே கிரந்தாஸாகிப் வைக்கப்பட்டிருப்பதையும், சுவாமிக்குப் பூஜை நைவேத்தியங்கள் நடப்பதையும் செவ்வையாகப் பார்க்கலாம். மேல்மெத்தையில் இராமதாச குருவின் ஸமாதி இருக்கிறது. கீழ் உப்பரிகையில் ஸ்ரீமண்டபம் என்ற ஒரு கட்டடம் உள்ளது. குருநானக்கும் குருகோவிந்தும் எழுதியுள்ள மத நூல்களை அந்த மண்டபத்தில் கல்லிழைத்த ஒரு பொற்பீடத்தில் பட்டுப்பீதாம்பரங்களால் சுற்றிவைத்து அவற்றைத் தெய்வமாக ஜனங்கள் கொண்டாடி வருகிருர்கள்.

குருகோவிந்தர் காலகதியடைந்தபோது அவர் தமது சிஷ்யர்களை யழைத்து வேருெரு குருவையும் அவர்கள் நினைக்க வேண்டாமென்றும் கிரந்தாஸாகிப் என்னும் புஸ்தகத்தையே தங்கள் குருவாகக் கொள்ளவேண்டுமென்றும் அதனை ஆசாரிய பீடத்தில் வைத்து ஆராதித்து வரவேண்டுமென்றும் உபதேசித்தார். அந்த உபதேசத்தின்படியே சீக்கியர்கள் மிக்க பயபக்தியுடன் அந்தக் கிரந்தத்தை ஆராதித்து வருகிருர்கள்.

அந்த ஆலயத்துக்குள் யாரும்போய்ப் பார்க்கலாம். ஆனல் கோவிலுக்குள் நுழையும்போது பாதரக்ஷைகளை வெளியேகழற்றிவிட்டுத்தான் போகவேண்டும். கோவில் அர்ச்சகர்களுக்கு அகாலீலர் என்று பெயர். அங்கே தரிசனத்துக்காக வருபவர்களை அவர்கள் மிகவும் பிரியமாக முக்கியமான எல்

லா இடங்களுக்கும் அழைத்துக்கொண்டுபோய்க் காட்டிப் பிரசாதங்களையும் சுவாமிக்குச் சாற்றிய புஷ்பங்களையும் கொடுப்பார்கள். யாத்திரிகர்கள் இந்தச் செலவுக்காக அவர்களிடம் ஏதேனும் பணம் கொடுப்பதுண்டு. பண்டார்புரியில் விட்டல பஜனை இரவும் பகலும் நடப்பதுபோல் அமிருதஸரஸிலும் பஜனை இடைவிடாமல் நடக்கும்.

ஆலயத்தைச் சுற்றிலுமுள்ள சாவகாரிகளின் பல அரண்மனைகளையும், மாளிகைகளையும் பார்த்தால் இந்த ஆலயத்தின் பாதுகாப்புக்காகவே ஏற்பட்ட பெரிய குன்றுகளைப்போல் அவைகள் தோற்றும். இந்தப் பெரிய அரண்மனைகளின் உப்பரிகைகளில் ஏறி நின்று அந்த ஆலயத்தை நோக்கினால் அது கீழேயிருந்து மிகவும் அகலமாகக் கிளம்பி மேலே சிறிய வடிவமாகக் குவிந்திருப்பதுபோல் காணப்படும். சூரிய வெளிச்சத்தில் அந்த ஆலயம் இன்னபடி ஜ்வலித்துக்கொண்டிருக்குமென்பதை நீங்களே யோசித்துப்பார்க்கவேண்டும்.



## 28. சிறந்த பத்து விதிகள்.

இந்தப் பாடத்தில் சிறந்த விதிகள் சொல்லப்படுகின்றன. அவற்றை நீங்கள் விடாமல் ஒழுங்காக அனுசரித்து வருவீர்களானால் பிற்காலத்தில் என்ன தொழிலை ஏற்றுக் கொண்டாலும் மிக்க மேன்மையை அடைவீர்களென்பது நிச்சயம்.

அந்த விதிகளாவன:—

(1) இன்றைக்கே செய்து முடிக்கக்கூடிய காரியத்தை நாளைக்குச் செய்துகொள்ளலாமென்று தள்ளிவைக்கக்கூடாது.

(2) காலையில் படுக்கையைவிட்டு எழுந்தவுடன் இன்ன இன்ன காரியங்கள் நாம் செய்யவேண்டுமென்று நினைத்துப் பார்க்கவேண்டும். பிறகு ஒவ்வொரு காரியத்தையும் அந்தத் தினத்திற்குள் இன்ன இன்ன காலத்தில் செய்து முடிக்கலாமென்று ஒரு வரையறை ஏற்படுத்திக்கொண்டு அவ்வாறே செய்து முடிக்கவேண்டும். பிறகு இரவில் படுத்துக்கொள்வதற்கு முன்பு 'நாம் இன்று காலையில் உத்தேசித்தபடி எல்லாக்

காரியங்களையும் அந்த அந்தக் காலங்களில் தவருமல் நிறைவேற்றினேமா?' என்று ஞாபகப்படுத்திக்கொள்ளவேண்டும். தினந்தோறும் விடாமல் நீங்கள் இவ்வாறு செய்து வருவீர்களானல் ஒரு காரியத்திலும் ஒழுங்காக இராத சிறுவர்களைக் காட்டிலும் எத்தனையோ பங்கு மேலான நிலைமையில் இருப்பீர்கள். இவ்வாறு இருப்பதில் உங்கள் வேலை ஒழுங்காக நடப்பதல்லாமல், குறிப்பிட்ட காலந்தவருமை என்னும் ஒரு நல்ல வழக்கமும் உங்களுக்கு ஏற்படும். அன்றியும் பிற்காலத்தில் உங்களுக்கு விசேஷமான உலக அனுபவம் உண்டாகும்.

(3) பணம் கையில் இல்லாதபோது செலவுக்கு வழியைத் தேடிக்கொள்ளக்கூடாது. பணம் வந்தவுடன் கொடுப்பதாகச் சொல்லிவிட்டு ஒரு பொருளையும் கடனுக்கு வாங்கக்கூடாது. என்ன அவசிய மிருந்தபோதிலும் கையில் பணமில்லாதபோது ஒரு பதார்த்தத்தை வாங்கக்கூடாது. கடனை வாங்கிவிட்டு அறுசுவை பதார்த்தங்களுடன் போஜனம் செய்வதைக்காட்டிலும் கடன் வாங்காமல் கூழைக் குடித்துவிட்டுக் காலங்கழித்தல் மிகவும் சிறந்தது.

(4) எப்போதும் போஜனத்தை மிதமாகச் செய்யவேண்டும். பசியில்லாதபோது புசிக்கக்கூடாது. இது தேகாரோக்கியத்துக்கேற்ற சிறந்த விதியாகும். ஒருவன் இதனை ஒழுங்காக அனுசரித்து வருவானனல் வைத்தியர்களுடைய உதவியே அவனுக்கு எந்தக் காலத்திலும் வேண்டியிராது.

(5) யாரிடமாவது கோபம் வந்தால் ஒன்று முதல் பத்து வரையில் வரிசையாக எண்ணிவிட்டு அப்பால் பேச ஆரம்பிக்கவேண்டும். கோபம் அதிகமாயிருந்தால் நூறுவரையில் எண்ணவேண்டும் கோபத்தை அடக்குவதற்கு இது வழியாகும்.

(6) நமக்குச் சொந்தமல்லாத பொருளைப் பிறரிடமிருந்து பெற்றுக்கொள்ளக்கூடாது. அதுதான் சிறந்த பாக்கியம். அனுவசியமாக அயலாரிடமிருந்து நாம் ஒரு சிறிய தானியத்தைப் பெற்றுக்கொண்டாலும் ஆயிரம் ரூபாய் திருடின ஒரு திருடனுடைய நிலைமையை அடைகிறேம். பிறரால் பெரிய அயோக்கியனென்று மிகவும் அவமதித்து எண்ணப்படுகிறவனும் தன்னுடைய இளமையில் குற்றமற்றவனுகவே யிருந்திருப்பான். ஆனல் திருட்டுத்தனமாகிய கெட்ட வழக்கம்

சிறிது சிறிதாக அவனுக்கு ஏற்பட்டிருக்கும். முதலில் ஒரு பென்ஸிலைத் திருடியிருப்பான்; பிறகு ஒரு புஸ்தகத்தைத் திருடியிருப்பான். அப்பால் பணத்தைத்திருட ஆரம்பித் திருப்பான். கடைசியில் அவனுக்குச் சமானமான திருடன் யாருமில்லையென்று பெயர் வாங்கிவிடுவான்.

(7) எந்தக் காலத்திலும் உண்மை பேசவேண்டும். ஏதேனும் தவறுசெய்துவிட்டால் அதனை ஒப்புக்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் தவறுசெய்த குற்றமொன்றும், பொய்சொன்ன குற்றமொன்றுமாக இரண்டு குற்றங்கள் ஏற்படுகின்றன. சத்தியந் தவருதவனிடத்தில் யாரும் பிரியமாக இருப்பார்கள். கடவுளின் கிருபையும் அவனுக்கு உண்டாகும். ஒருவருக்கும் அவன் பயப்படவேண்டுவதில்லை.

(8) செய்யுங் காரியங்களைத் திருத்தமாகச் செய்யவேண்டும். ஒரு பாடத்தைப் படிப்பதாக இருந்தால் அதைச் செவ்வையாக வாசிக்கவேண்டும். விளையாடினாலும் அதில் கவனம் முழுவதையும் செலுத்தவேண்டும். பெற்றோர்கள் ஏதேனும் ஒரு வேலை செய்யும்படி கட்டளையிட்டால் அவர்களுக்குத் திருப்தியுண்டாகும்படியும் செவ்வையாகவும் அதை நிறைவேற்றவேண்டும்.

(9) சொன்னவார்த்தை தவறலாகாது. ஒருவருக்கு ஏதேனும் ஓர் உபகாரத்தைச் செய்வதாக நீங்கள் வாக்களித்தால் அதனை எப்படியேனும் செய்யவேண்டும். முடியாத காரியத்தைச் செய்து கொடுப்பதாக அவசரப்பட்டு ஒரு காலத்தும் வாக்குத்தத்தம் செய்யலாகாது. ஒருவனுக்கு வாக்குத்தத்தம் செய்துவிட்டால் அவன் நம்மை நம்பியிருப்பான். ஆதலால் ஒருவன் ஒரு காரியத்தை முடித்துக்கொடுக்க வேண்டுமென்று நம்மைக் கேட்டுக்கொள்ளும்போது அது நம்மால் சாத்தியமாகாத காரியமாக இருந்தால் முடியாதென்று உடனே சொல்லிவிடுவது மிகவும் நல்லது.

(10) ஒரு முயற்சியில் இருக்கும்போது முதல் தடவையில் காரியம் அனுகூலமாகாவிட்டால் அதைரியப்பட்டு முயற்சியை நிறுத்திவிடக்கூடாது. மறுபடியும் முயற்சிசெய்து பார்க்கவேண்டும். அதிலும் பலிக்காவிட்டால் காரியம் முடிவாகிறவரையில் முயன்றுகொண்டே யிருக்கவேண்டும். முயற்சி வீண்போகாது.

## 29. ஒரு குடியானவன் நியாயவாதியிடம் சென்றது.

மதுரைக்குச் சமீபமான ஒரு கிராமத்தில் சில வருஷங்களுக்குமுன் குடியானவனொருவன் இருந்தான். வயல்களில் தானியங்களைப் பயிரிட்டுவருவது அவனுடையவேலை. அவன் மிக்க உழைப்பாளி. தன் வேலையில் கிடைக்கும் பொருளைக் கொண்டு அவன் தன் குடும்பத்தைக் காப்பாற்றிவந்தான். அவனுக்கு வீரமுத்து என்று பெயர்.

ஒருநாள் அவனுக்கு வேலையொன்றும் இல்லாமல் அவகாசம் இருந்தது. அன்றைப்பொழுதை வீணுக்காமல் ஒரு நியாயவாதியிடம்போய் ஏதேனும் ஒரு நல்லயோசனை கேட்கவேண்டுமென்று எண்ணினுன். நியாயசபைகளில் கட்சிக்காரர்களுடைய நியாயங்களை எடுத்துப் பேசுவதால் வக்கீலுக்கு நியாயவாதியென்று பெயர்.

வீரமுத்து இருந்த கிராமத்தில் அவன் வீட்டுக்கு அரைமைல் தூரத்தில் ஒரு மாளிகையில் மிக்க பிரசித்திபெற்ற வக்கீலொருவர் வசித்துவந்தார். அவருக்குப் புண்ணியகோடி முதலியார் என்று பெயர். அவரைப்பற்றி வீரமுத்துக்கு நன்ருகத்தெரியும். ஆதலால் அவரிடமேபோய் ஆலோசனை கேட்கவேண்டுமென்று அவன் நிச்சயம் செய்துகொண்டான். அதற்காக வீரமுத்து அன்றைத்தினம் காலையில் அவருடைய மாளிகைக்குப் போய்ச்சேர்ந்தான்.

அவன் போனபோது அநேகம் கட்சிக்காரர்கள் புண்ணியகோடி முதலியாருடைய மாளிகையின் வெளிப்புறத்தில் கூட்டமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்களெல்லாரும், ஒவ்வொருவராகத் தாங்கள் வந்தகாரியத்தை வக்கீலிடம் முடித்துக்கொண்டு திரும்பினுர்கள். அப்பால் முதலியார் வீரமுத்தை அழைத்து ஒரு பலகையில் இருக்கச்சொல்லி அவன் வந்தகாரியம் என்னவென்று விசாரித்தார்.

வீரமுத்து: "ஐயா, உங்களுடைய திறமையைப்பற்றியும் புத்திவிசாலத்தைப் பற்றியும் நான் அதிகமாகக் கேட்டிருக்கிறேன். எனக்கு இப்போது கொஞ்சம் ஒழிவு நேரம் கிடைத்தது. அதை வீணுக்காமல் தங்களோடுபேசி நல்லயோசனை கேட்கலாமென்றே வந்திருக்கிறேன்."

புண்ணியகோடி முதலியார்: "ஐயா, நீர் என்னிடம் இவ்வளவு பிரியம்வைத்து வந்தது என்னுடைய பாக்கியம் தான். நியாயஸ்தலத்தில் ஏதோ ஒரு வழக்கைப்பற்றிக்கேட்க வந்திருக்கிறீர் என்று நினைக்கிறேன். என்ன விசேஷம்? சொல்லும்."

வீரமுத்து: "என்ன வழக்கு என்று கேட்கிறீர்களோ? நான் வழக்கு இருக்கும் பக்கத்துக்கே போகமாட்டேன் என்பது உங்களுக்குத் தெரியாதா? இதுவரையில் ஒருவரிடமும் நான் எவ்விதமான சண்டைக்கும் போகாமல் காலந் தள்ளிவிட்டேன். இனி எப்படியோ?

வக்கீல்: "அப்படியானல் குடும்பசொத்தைப் பாகம் செய்துகொள்ள வேண்டுமா?"

**வீரமுத்து:** "அப்படி யொன்றும் இல்லை. நாங்கள் எங்கள் முன்னோர்கள் காலம் முதலாகவே ஒரேகுடும்பமாக வாழ்ந்துவருகிறோம். இதுவரையில் எங்களுக்குள் எந்தக் காலத்திலும் பிரிவினை ஏற்படவே இல்லை. இனிமேலும் இந்த ஒற்றுமை எங்களுக்குள் ஆண்டவன் கிருபையால் இருக்குமென்று எண்ணுகிறேன்."

**வக்கீல்:** "ஏதேனும் ஒரு பொருள் வாங்குவதைப்பற்றியாவது விற்பதைப்பற்றியாவது உடன்படிக்கைச் சீட்டு எழுதிக்கொண்டுபோக வந்திருக்கிறீரா?"

**வீரமுத்து:** "அப்படி யொன்றும் இல்லை."

**வக்கீல்:** "அப்படியானல் ஒருவேளை யாரிடமேனும் நிலம் குத்தகைக்கு எடுப்பதைப்பற்றி யோசனைகேட்க வந்திருப்பீரென்று நினைக்கிறேன்."

**வீரமுத்து:** "அதுவுமில்லை."

**வக்கீல்:** "ஆனல் என்னிடம் எதற்காகத்தான் வந்தீர்? சொல்லும்."

**வீரமுத்து:** "உங்களிடம் ஆலோசனை கேட்க வந்தேனென்று முன்னேயே சொன்னேன். உங்களுக்கு அது ஞாபகமில்லையா? அதற்காக உங்களுக்கு என்ன கொடுக்கவேண்டுமோ அதைக் கொடுக்கிறேன். எனக்கு நன்மை உண்டாவதற்கு எது நல்லதோ அதை நீங்கள் சொல்லவேண்டும். அதுவே என் பிரார்த்தனை."

பிறகு வக்கீல் அவனுடைய பேச்சைக்கேட்டு நகைத்து அவனைப்பார்த்து "உம்முடைய பெயர் என்ன?" என்று கேட்டார். அவர் அவ்வாறு கேட்கவே தான் வந்தகாரியம் அனுகூலந்தான் என்று வீரமுத்து சந்தோஷமடைந்து "என் பெயர் வீரமுத்து" என்றான்.

வக்கீல்: "உம்முடைய வயது என்ன?"

வீரமுத்து: "முப்பத்தைந்து."

வக்கீல்: "உம்முடைய தொழில் யாது?"

வீரமுத்து: "விவசாயம்."

உடனே வக்கீல் ஒரு கடிதத்தை எடுத்து அதில் சில வரிகளை எழுதி அதனை நன்றாகமடித்து வீரமுத்தினிடம் கொடுத்தார்.

பின்பு வீரமுத்து மிகவும் வணக்கமாக நின்று அதை வாங்கிக்கொண்டு "இவ்வளவு சீக்கிரத்தில் காரியம் முடிந்துவிட்டதா? மிகவும் சந்தோஷம். இதற்காக நான் உங்களுக்கு எவ்வளவு தொகை கொடுக்கவேண்டும்?" என்று கேட்டான்.

இரண்டு வராகன் தரவேண்டுமென்று வக்கீல் சொல்ல வீரமுத்து மிக்க மகிழ்ச்சியுடன் அந்தத் தொகையைத் தன் இடுப்பிலிருந்து எடுத்து அவரிடம் கொடுத்தான். பிறகு அவரிடம் விடைபெற்றுத் தன் வீட்டுக்குத் திரும்பினான். அன்று நல்ல பொழுதாகப் போயிற்றே என்று அவனுக்கு இருந்த சந்தோஷத்துக்கு எல்லை இல்லை.

வீரமுத்து வீடுபோய்ச் சேர்ந்தபோது சூரியன் அஸ்தமிக்கும் சமயமாக இருந்தது. வக்கீல்வீட்டுக்குப் போய் வந்த களைப்பினால் அவன் ஒரு வேலையையும் செய்யாமல் படுத்துக்கொண்டான்.

அதற்கு ஐந்தாறு தினங்களுக்குமுன் அவன் பயிரிட்டிருந்த நெல் அறுக்கப்பட்டு வைக்கோல் முழுவதும் நன்றாக உலர்ந்திருந்தது. அன்றைத்தினம் ஒரு சிறுவன் வந்து "உலர்ந்த வைக்கோலை உள்ளே கொண்டுவந்து போடலாமா?" என்று கேட்டான்.

தன் புருஷன் வெளியே போய்விட்டு அலுப்புற்றுப் படுத்திருப்பதைக்கண்ட அவன் மனைவி சிறுவனைப்பார்த்து, "பொழுதுபோகிற வேளையில் இப்போது ஏன் கொண்டுவர

வேண்டும்? எல்லாம் நாளைக்காலையில் பார்த்துக்கொள்ளலாம். அவசரமொன்றும் இல்லை" என்றனள்.

சிறுவன் மறுபடியும் விடாமல், "இராத்திரி ஒருவேளை மழை பெய்யுமானால் எல்லாம் சேதமாய்விடுமே. அந்த வைக் கோலை எடுத்துவர வண்டிகள் இருக்கின்றன" என்றான். அவன் பலவிதமாகச் சொல்லியும் குடியானவன் மனைவி, "எல்லாம் நாளைக்காலையில் பார்த்துக்கொள்ளலாம்" என்றனள்.

சிறுவனுக்கும் தன் மனைவிக்கும் நடந்த சம்பாஷணையை வீரமுத்து கவனித்தான். அப்போது வக்கீல் எழுதிக் கொடுத்த சீட்டு அவனுடைய ஞாபகத்துக்கு வந்தது. உடனே அவன் தன் மனைவியை அழைத்து "நான் இரண்டு வராகன் கொடுத்து ஒரு தகுந்த வக்கீலினிடம் நல்ல ஆலோசனை எழுதி வாங்கிவந்திருக்கிறேன். அதில் எழுதியிருக்கிறபடி நாம் நடந்தால் நமக்கு ஒருநாளும் தீமையுண்டாகாது. அதில் என்ன எழுதியிருக்கிறது படிக்கிறேன் கேள்" என்று சொல்லி அந்தச் சீட்டைப் படித்தான். அதில், "வீரமுத்து, இன் றைக்கே நீ செய்யக்கூடிய காரியத்தை நாளையதினம் பார்த்துக் கொள்ளலாமென்று ஒரு காலத்திலும் நிறுத்திவைக்காதே" என்னும் வார்த்தைகள் எழுதப்பட்டிருந்தன.

அதைப் படித்தவுடன் வீரமுத்து, களிப்படைந்து தன் மனைவியைப்பார்த்து, "இதுவே உனக்குப் புத்திமதி என்று எண்ணிக்கொள். இனி நாளைவரையில் தாமதம் செய்யாதே. இப்போதே அந்தச் சிறுவனை வண்டிகளுடன்போய் வைக் கோலையெல்லாம் கொண்டுவரும்படி சொல்லு. நாளைக் காலைக் குள் எது எப்படியிருக்குமோ ஒன்றும் நிச்சயமில்லை" என் றான். அப்போதும் அவன் மனைவி அதற்கு என்ன அவசரம் என்று பலவாறு சொல்லித் தடுத்தாள்.

ஆனாலும் வீரமுத்து ஒரே பிடிவாதமாக, "இது நான் இரண்டு வராகன்கொடுத்து வாங்கிவந்த புத்திமதி. இதை நாம் அசட்டைசெய்வது நியாயமல்ல. ஆகையால் இதன்படி நடந்தே தீரவேண்டும்" என்று சொல்லித் தானே எழுந்திருந்து வண்டிகளுடன் வயல்களுக்குப் போனான்.

பிறகு வைக்கோல் முழுவதையும் அவன் வண்டிகளில் ஏற்றி வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்த்தான். அதனால் அவ

னுக்கு விசேஷமான நன்மையுண்டாயிற்றென்றே சொல்ல வேண்டும்.

அன்று இராத்திரி திடீரென்று கனத்தமழை பொழிந்து மற்றவர்களுடைய வயல்களில் இருந்த வைக்கோல், தானியம் முதலியவற்றை யெல்லாம் நாசமாக்கிவிட்டது. வீரமுத்து அன்றைத்தினம் அசட்டை செய்யாமையால் அவனுக்கு நஷ்டமொன்றும் உண்டாகவில்லை.

முதலிலேயே இப்படிப்பட்ட நன்மை உண்டானதால் அவனுக்கு வக்கீலினுடைய ஆலோசனையில் அதிக நம்பிக்கை உண்டாயிற்று. அதுமுதலாக அவன் எல்லாக்காரியங்களி லும் வக்கீலின் அந்த ஆலோசனைப்படியே நடந்து வந்தான். அதனால் அவன் வரவர விருத்தி அடைந்து நாளடைவில் பெருத்த செல்வவானானான். தனக்கு அவ்வளவு நன்மையும் வக்கீலால் கிடைத்ததென்று அவன் வருஷந்தோறும் அவருக் குத் தங்க காணிக்கைகளை அனுப்பிவந்தான்.



## 30. அற்புதமான ஒரு யந்திரம்.

சென்னபட்டணம், பம்பாய், கல்கத்தா முதலான பெரிய நகரங்களில் அநேக பஞ்சாலைகள் இருப்பதை அநேகர் கேட் டிருக்கலாம்; சிலர் அவற்றை நேரில் பார்த்தும் இருக்கலாம். சிறிதும் பதனிடாத பஞ்சுகளை அந்த ஆலைக்குள் போட்டால் அதிசீக்கிரத்தில் அது அந்தப் பஞ்சுகளிலுள்ள அழுக்கை யெல்லாம் எடுத்துப் பன்னிப் பன்னிப் பட்டை நூலாக நூற்று முடிவில் நல்ல வஸ்திரங்களாக நெய்து தருகிறது.

இவ்விதம் சிறிதும் பதனிடாத பஞ்சைச் சிறந்த வஸ்திர மாகச் செய்துகொடுக்கிற பஞ்சாலை எவ்வளவு அற்புதமானது! அதன் விசித்திரங்கள் எல்லாம் நேரில் பார்த்தால்மட்டுமே தெரியும். அதைப்பார்க்கிலும் அற்புதமான வேறொரு யந் திரம் உண்டு. அதற்குள்ளே பழைய கந்தைத்துணிகளைப் போட்டால் வெகு சீக்கிரத்தில் அவைகள் எல்லாம் மிகவும் அழகான கடிதங்களாக வெளியேவரும். என்ன ஆச்சரியம் என்ன ஆச்சரியம் என்று யாவரும் அதைப்பார்த்து வியப் படைவார்கள். ஆனால், நான் இப்போது சொல்லப்போகிற

யந்திரம் இதைக்காட்டிலும் ஆச்சரியமானது அது இல்லா விட்டால் இந்தக் காகித யந்திரத்தைச் செய்வதும் அசாத்திய மாகும்.

இப்படியே நீராவியின் பலத்தால் மிகவும் வேகமாக இருப் புப் பாதைகளின்மேலும் ஒன்றூலும் தடுக்கமுடியாத அலைகளை யும் காற்றையும் எதிர்த்துச் சமுத்திரத்தின்மேலும் பெருஞ் சுமைகளை ஏற்றிக்கொண்டு செல்லும் யந்திரத்தை நீங்கள் பார்த்திருக்கிறீர்களல்லவா! நான் சொல்லப்போகிற மகா யந் திரமோ இந்த நீராவி யந்திரங்களைக் காட்டிலும் எத்தனையோ பங்கு சிறந்தது. அந்த மகா யந்திரத்தினுலேதான் பூமியி லிருந்து இரும்பு வெட்டியெடுக்கப்பட்டு இருப்புப்பாதையா கப் போடப்படுகிறது. இந்த நீராவியந்திரங்களுக்கெல்லாம் அதுவே தந்தையாம். பூமியில் உள்ள பெரிய நகரங்கள் எல் லாவற்றிலும் விதம் விதமான மாளிகைகள் கணக்கில்லாமல் இருக்கின்றன. ஆலயங்கள், உத்தியோகசாலைகள், கடைகள், நாடகசாலைகள், பண்டசாலைகள், சபாமண்டபங்கள் முதலிய சிறந்த கட்டடங்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவை யாவும் நான் சொல்லும் மகா யந்திரத்தினுலேதான் செய்யப் பட்டவை.

இவ்விதமாகவே நெடுந்தூரத்தில் இருக்கும் ஆறுகளிலும், ஏரிகளிலும், மலைகளிலும் இருக்கும் ஜலத்தை நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் கொண்டுவரும் பெரிய கால்வாய்களும், குழாய்களும் அந்த மகா யந்திரத்தினுலேயே ஆக்கப்படுகின் றன. அந்த மகா யந்திரத்தின் தன்மைகளைச் சொல்லு கிறேன், கேளுங்கள்.

அந்த மகா யந்திரம் மற்ற யந்திரங்களைப்போல் அல்லா மல் தானே இடம்பெயர்ந்து ஓடத்தக்கது. புகைவண்டியும், கப்பலும் இடம்பெயர்ந்து ஓடினுலும், இவைகளுக்கும் அதற் கும் அதிக வித்தியாசமுண்டு. புகைவண்டி இருப்புப்பாதை யின்மேல் மட்டும் ஓடும்; கப்பல் கடலின்மேல் மட்டும் ஓடும்; அன்றியும் அவை ஒருமுகமாகவே ஓடும்; நான் சொல்லும் யந்திரமோ எந்த இடத்திலும் எந்த முகமாகவும் ஓடும். அவை பிறருடைய முயற்சியின்றி ஓடமாட்டா. மகா யந் திரமோ அப்படியல்ல; அதை உடையவனுடைய இஷ்டப் படியே அந்த யந்திரத்திலுள்ள பல பூட்டுக்கள், கீல்கள்

முதலியவற்றின் உதவியால் தானே வேண்டியபடியெல்லாம் நடக்கும்.

புகைவண்டியைக் குறிப்பிட்ட இடம்போய்ச் சேர்வதற்கு முன்னமேயே நிறுத்தவேண்டும்; இல்லாவிட்டால் அது தானும் அடிபட்டு அதிலுள்ள ஜனங்களுக்கும் பொருள்களுக்கும் சேதத்தை உண்டாக்கும். பின்னும் சிறிதுதூரம் போக வேண்டுமானால் தானே வேறோர் இருப்புப்பாதையை அது அமைத்துக்கொள்ளாது. தண்ணீரில் முழுகிப்போகாதபடி தன்னைக் காத்துக்கொள்ளவும் அதனால் முடியாது. தெய்வ கதியாய் அது ஆறுகளிலாவது கடலிலாவது விழுமானால் அப்படியே அமிழ்ந்துபோமேயல்லாமல் வெளிவர வேறுவழியில்லை. நான் சொல்லுகிற மகா யந்திரமோ அப்படியல்ல. அது மிகவும் அபூர்வமான சக்தியோடு அமைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு உடையவன் அதன் உபயோகத்தைத் தெரிந்துகொள்வானானால், அது அவனோடு தண்ணீரில் விழுந்தாலும் பயமில்லை. அதன்மேல் மிதக்கும்படி செய்யலாம். அல்லாமலும் அதற்குடையவன் இஷ்டப்பட்டால் அதன் மேல் உள்ளபொருள் ஒன்றும் சிறிதும் நனையாதபடி அந்த நீர்மட்டத்துக்குமேல் சிறிது உயரத்தில் செய்த ஓர் உபாயத்தாலாவது அல்லது தண்ணீரின் மேலேயே மிதக்கும்படி அதனாலேயே செய்யப்பட்ட ஒரு கருவியாலாவது அதனைத் தாண்டிப்போகலாம்.

அந்த அற்புதமான யந்திரத்தில் கண்ணாடியாற்செய்த பலகணி யொன்று உண்டு. அதன் வழியாக அதற்குள் இருப்பவன் தனக்கு அருகில் நடக்கிற காரியங்களை மட்டுமே யல்லாமல் வெகு தூரத்தில் நடப்பவைகளையும் தெரிந்து கொள்வான். பிறருடைய உட்கருத்தையும் அது தெரிவிக்கும். சில விஷயங்களில் அது அநேக ஆயிரம் வருஷங்களுக்கு முன் நடந்தவைகளையும் வெளிப்படுத்தும்; சில வேளைகளில் அந்தப் பலகணியிலுள்ள கருவியானது யாரும் அதிசயிக்கும்படியான அழகைப்பெற்று அதை உடையவனுக்கு மிகுந்த சந்தோஷத்தையும் கொடுக்கும்.

அந்த யந்திரத்தில் மேளமொன்று உண்டு. அதற்கு ஏற்ற வழியாக யாராவது வந்து அதன்மேல் அடிப்பார்களானால் அதைக்கேட்டு அதன் எஜமானன் பல சங்கதிகளைத் தெரிந்து

கொள்ளுகிறன். அந்தச் சங்கதிகளை மேலேசொன்ன பல கணியின் முகமாகத் தெரிந்துகொள்ளமுடியாது. அந்தமேளம் எப்போதும் அடிக்கப்படுவதிலேயே அநேகர் விருப்பமுள்ள வர்களாக இருக்கிறர்கள். அந்த யந்திரத்தில் இப்படியே வேறெரு கருவியுண்டு. அதன் மூலமாய் அதன் எஜமானன் பலகணியாலும் மேளத்திஞலும் தெரிந்துகொண்ட விஷயங் களையெல்லாம் வெளியிடுவான். அதன் எஜமானன் அதை நன்ருக உபயோகித்து வருவாஞனல் ஜனங்களுக்கு மிக்க ஆனந்தம் உண்டாகும்.

சில சமயங்களில் ஜனங்கள் அதனல் மனமுருகிப் புலம் பும்படியாகவும், சில சமயங்களில் அதிக ஆச்சரியமும் களிப் பும்கொண்டு நகைக்கும்படியாகவும் இருக்கும்.

காகித யந்திரமானது காகித மொன்றைத்தவிர வேறு எதையேனும் செய்ததாக யாரும் கேள்விப்பட்டதில்லை: இப் படியே ஊசியந்திரம் ஊசியைத்தவிர மற்றென்றைச் செய்த தில்லை. அச்சுயந்திரம் அச்சுவேலையைத் தவிர வேறென்றை யும் செய்யாது. அறுக்கும் யந்திரமும் அப்படியே. ஆனல் நான் சொல்லும் மகா யந்திரமோ அப்படிப்பட்டதல்ல. அது செய்யாத வியாபாரம் உலகத்தில் இல்லை. காகிதங்களையும், காகித யந்திரங்களையும் அது செய்யும். ஊசிகளையும், ஊசியந் திரங்களையும் அது செய்யும். இப்படியே அச்சுயந்திரம், அறுப்புயந்திரம் முதலான எவ்வித யந்திரத்தையும் அது செய்ய வல்லது.

அந்த யந்திரம் தானே புஸ்தகங்களை அச்சிட்டு ஒன்ருகக் கட்டும். அரைக்கும், தைக்கும், சமைக்கும், அறுக்கும், நிறுக்கும், கல் அறுக்கும், வில் அடிக்கும், மண் எடுக்கும், வீடு கட்டும், காடு வெட்டும் இப்படியே பலவிதமான வேலை களையும் செய்யும். அவ்வேலைகளை யெல்லாம் எடுத்து எழுது வதாஞல் இந்தப் புஸ்தகத்தில் இடம் போதாது.

இந்த யந்திரத்தைக் காப்பாற்றி, நடத்துகிறவிதம் வெகு விசித்திரமானது. அதை நடத்துவதற்கு வேண்டிய பொருள் கள் எவையாஞலும் அவற்றையெல்லாம் அந்த யந்திரம் தா னே தேடிக்கொண்டு தன்னிடத்தில் உள்ள அரைக்கும் கருவி யொன்றிலே போட்டுக்கொள்ளுகிறது. அந்தக் கருவி அவற் றை நன்ருக நசுக்கிப் பொடிசெய்து உள்ளே தள்ளுகிறது.

பிறகு அவை உள்ளே யிருக்கும் ஒரு தொட்டியிலே போய் விழுந்து அங்கேயே சிறிதுநேரம் இருந்து நைந்து நீரோடு கலக்கின்றன. பின்பு அங்கிருந்து பல விடங்களுக்கும் போய் மாறுபட்டு அநேகம் குழாய்களில் புகுந்து அவற்றின் மூலமாக அந்த யந்திரத்தின் எல்லாப் பக்கங்களுக்கும் செல்லுகின்றன. இந்தக் காரியங்களெல்லாம் இப்படியே விடாமல் நடந்து அடிக்கடி மாறிக்கொண்டுவரும் வரையில் அந்த யந்திரமும் உழைக்கும்.

இந்த யந்திரம் ஒவ்வொருநாளும் கொஞ்சநேரம் வேலையில்லாமல் இளைப்பாறி யிருக்கும்படி செய்யவேண்டும். இல்லாவிட்டால் சீக்கிரத்தில் கெட்டுப்போம். சில சமயங்களில் தகாத பொருள்களை அதற்குள் போடுவதாலும், உரிய விதிகளை மீறி நடப்பதாலும் அந்த யந்திரம் ஒழுங்கு தவறிப்போம். அந்த யந்திரம் நூறு வருஷங்களுக்குமேல் நீடித்து இருந்ததற்குப் பல திருஷ்டாந்தங்கள் உண்டு; ஆனாலும் இரண்டொரு நாழிகைக்குள் அழிந்து போவதற்கும் பல உதாரணங்கள் இருக்கின்றன.

இன்னும் அந்த யந்திரத்திற்கு எவ்வளவோ குணங்கள் இருக்கின்றன. அந்தவிதமான யந்திரம் எனக்கும் உண்டு; உங்களுக்கும் உண்டு. எல்லோருக்குமே உண்டு. அந்த மகா யந்திரமாவது சரீரமாகும். அதை அசட்டைசெய்யாமல் சரியாகப் பாதுகாத்து அதைத் தக்கபடி சரியானவழியில் உபயோகித்துவந்தால் ஒருவருக்கும் ஒரு காலத்திலும் ஒரு துன்பமும் நேரிடாது. இப்படி எல்லாக் காரியங்களுக்கும் உபயோகமான மகா யந்திரத்தை அளித்து நம்மைக் கருணையுடன் பாதுகாத்துவரும் கருணா மூர்த்தியாகிய கடவுளை நாம் என்றும் மறவாமல் அவருடைய கட்டளைக்கு அடங்கி நடக்க வேண்டும்.



## 31. ஆறுகளின் உற்பத்தி.

உலகத்தில் சிற ஆறுகள் பெரியவைகளாகவும், சில ஆறுகள் சிறியவைகளாகவும் இருக்கின்றன. ஆனால் எல்லாம் கடைசியில் கடலில்போய் விழுகின்றன. அந்த ஆறுகள் முதலில் எவ்விடத்தில் உற்பத்தியாகின்றனவோ அதைப்பற்

றிச் சற்று விசாரிப்போம். ஓர் ஆற்றின் முகத்துவாரம் தொடங்கி அதற்கு எதிர்முகமாகப் போவோமானால் அந்த ஆற்றுப் பெருக்கை அதிகப்படுத்துகிற பல உபநதிகள் இடையிடையே அதில் வந்து விழுவதை நாம் பார்ப்போம். அந்த உபநதிகள் எல்லாம் பிரிந்துபோன பிறகு ஆறு குறுகலாகி விடுகிறது.

முதலில் அந்தப் பெரிய நதி ஒரு சிற்ருருகவும், பிறகு ஓர் ஓடையாகவும், பின்பு பல அருவிகளாகவும் சுருங்கிக் கடைசியில் மிகவும் சிறிய அருவிகளாகிறது. இந்த அருவிகளே ஆற்றின் உற்பத்தியாகும். பெரும்பாலும் இவை மலைகளிலேயே காணப்படுகின்றன. கங்காநதி இமய மலையிலும், காவிரியாறு மேற்குத் தொடர்ச்சிமலை அல்லது சகிய பர்வதத்திலும், ரைன்நதி ஆல்ப்ஸ்மலையிலும், அமாஜான் நதி பெரு தேசத்திலுள்ள ஆந்திஸ் மலையிலும் உற்பத்தியாகின்றன.

ஆனாலும், இந்த மலைகள் நதிகளின் முதல் உற்பத்தி ஸ்தானமல்ல. ஏனென்ருல் முதலில் மலையினின்றும் பெருகுகிற அருவிகளுக்கு ஜலம் எங்கிருந்து கிடைக்கிறது? சிறிது காலம் மலைகளில் வாசம்செய்து பார்ப்போமானால் அவை மழையினால் உண்டாகின்றனவென்று தெளிவாகும். கோடைநாளில் அந்த அருவிகள் ஜலம் குறைந்தும், சில சமயங்களில் முற்றிலும் வறண்டும், மழைக்காலத்தில் நொப்பும் நுரையுமாகக் கரைபுரண்டோடவும் காண்கிறோம்.

அநேகமாக இந்த மலையருவிகள் போகப்போக மிகவும் நுட்பமாகிக் கண்ணுக்குத் தெரியாமல் மலைப்புறங்களில் மறைந்துபோகின்றன. கவனித்துப் பார்த்துக்கொண்டே போனால் சில நதிகளுக்கு ஆதாரமான அருவிகள் பூமியில் உள்ள ஊற்றுக்களினின்றும் உற்பத்தியாகின்றன வென்று நன்ருய்ப் புலப்படும். ஆனாலும் சற்று யோசித்துப் பார்த்தால் அந்த ஊற்றுக்களும் மழைபெய்த நீர் மண்ணிலும் பாறைகளிலும் ஊறி அவற்ருல் உண்டாகின்றன வென்று தெரியும்.

ஆனாலும், மலையருவிகள் உண்டாவதற்குக் காரணமான மழை எங்கிருந்து உண்டாகிறதென்று கவனிக்கவேண்டும். நிதானித்துப் பார்ப்போமானால் இந்தக் கேள்விக்குச் சுலபமாக விடைகொடுக்கலாம். ஆகாயம் நிர்மலமாயிருக்கையில் மழை பெய்யாமல், மேகம் நிறைந்திருக்கும்போதுமட்டும்

மழை பெய்வதால் மேகமே மழைக்கு ஆதாரமெனக் கொள்ள வேண்டும்.

மேகமாவது என்ன? மேகத்துக்குச் சமானமாக உங்களுக்குத் தெரிந்தபொருள் ஏதாவது உண்டா? மேகத்துக்குச் சமானமானது நீராவி யந்திரத்தினின்றும் கிளம்பும் புகையென்று நீங்கள் உடனே சொல்லுவீர்கள். அந்த யந்திரத்தினின்றும் நீராவி வெளிப்படும் ஒவ்வொருதரமும் ஆகாயத்தில் மேகம் போலப் புகை படருகின்றது. அந்த மேகத்தை நுட்பமாய்ப் பார்த்தால் அந்தப் புகை செல்லும் துவாரத்தின் நுனிக்குக் கொஞ்சதூரம் அப்புறமே மேகம் உண்டாகிறதென்று தெரிந்து கொள்வீர்கள். மேலே மேகமாக மாறத்தக்கபொருள் அப்படிப்பட்ட வெளியின் வழியாகத்தானே போகவேண்டும்? முதல் நிமிஷத்தில் கண்ணுக்குப் புலப்படாமல் ஊடுருவிப் பார்க்கும்படி யிருந்து மறு நிமிஷத்தில் மேகம்போல் மந்தமாகக் கண்ணுக்குத் தெரியும்படி மாறுகின்ற இந்தப் பொருள் யாது?

இதுவே நீர் பொங்கும் கருவியினின்றும் கிளம்புகிற நீராவி. நீர் பொங்குகிற கருவிக்குள் அந்த ஆவி கண்ணுக்குத் தெளிவாகத் தோன்ருமல் இருக்கிறது. அந்த ஆவியைக் கண்ணுக்குப் புலப்படாதபடி அந்த நிலைமையிலேயே வைத்திருக்க வேண்டுமானல் ஜலம்பொங்கும் கருவிக்குள் எவ்வளவு சூடு இருக்கிறதோ அவ்வளவுக்குக் குறையாக சூடு எப்போதும் இருக்கவேண்டும். ஆகையால் புகைகிளம்பும் கருவிக்கு வெளிப்புறத்தில் உள்ள காற்ருேடு அந்த நீராவி கலந்தவுடன் அந்த நிலைமை அதற்கு மாறிப்போகிறது.

குளிர்ச்சி ஏறியவுடன் நீராவியின் ஒவ்வொரு திவலையும் நுட்பமான நீர்த்திவலையாக இறுகுகின்றது. இவ்வாறு இறுகிய நீர்த்துளிகள் அதிக நுட்பமாகி நெருங்கி ஆகாயத்தில் பறக்கின்றன. அவற்றையே நாம் மேகம் என்று சொல்லுகிருேம்.

ஓடுகிற நீராவியந்திரத்தின் புகை போக்கியிலிருந்து கொடிபோலக் கிளம்புகிற மேகத்தை உற்றுப்பாருங்கள். முதலில் நெருங்கியிருந்த மேகம் வரவர விலகிக் கடைசியில் ஒன்றுமில்லாமற் போகிறதல்லவா? அதை விடாமல் உற்றுப்பார்ப்பீர்களானல் அந்தப் புகை சீக்கிரத்தில் மறைந்துபோவது அந்த அந்த நாளின் தன்மைக்கு ஏற்றபடி யிருக்கிறதென்று

கண்டுகொள்வீர்கள். குளிர்ச்சி கொஞ்சம் அதிகரித்த கால மானுல் அந்த மப்பு ஆகாயத்தில் சிறிதுநேரம் அப்படியே தொங்கும். வறட்சியான காலத்திலோ அதிசீக்கிரத்தில் ஆகா யத்தோடு கலந்துபோகிறது.

அப்படியானுல் ஆகாயத்தில் அது எங்கே போய்ச் சேர் கின்றது? மறுபடியும் அது நீராவியாகி ஆகாயத்தில் மறைந்து போகின்றது. வாயுமண்டலம் எவ்வளவுக்கு எவ்வளவு வறண்டும் சூடுகொண்டும் இருக்கிறதோ அவ்வளவுக் கவ் வளவு மேகம் அதனுடன் கலந்து கண்ணுக்குத் தெரியாமற் போய்விடும்.

நமது வீட்டில் தண்ணீர் பொங்கும் ஒரு கொப்பரையி னுள்ளே சிறிதும் காற்றைப் புகவொட்டாமல் அழுத்தமாக மேலே மூடி அம்மூடியிலுள்ள ஒரு சிறுகுழாயின் வழியாக நீராவியை வெளிப்படும்படி செய்தால் நீராவி யந்திரத்தின் புகைபோக்கியிலிருந்து மேகம் உண்டாவதுபோலவே அந்தப் பாத்திரத்திலிருந்தும் மேகம் உண்டாகும். இப்படியே உல கத்தில் மேகங்கள் உண்டாகின்றன. நீராவி யந்திரம், தண் ணீர் பொங்கும் வீட்டுப்பாத்திரம் இவ்விரண்டிலும் மேகம் உண்டாவதற்கு உஷ்ணம் அவசியமானதல்லவா? தண்ணீ ரைச் சுடச்செய்து முதலில் அதை நீராவியாக்குகிறேம். உடனே குளிரப்பண்ணி அதை மேகமாக மாற்றுகிறேம். இப்படியே ஆகாயத்தில் உள்ள அளவற்ற மேகங்களுக்குக் காரணமென்ன? அவற்றை உண்டுபண்ண இந்த உலகத்தில் ஏதாவது ஒரு பெரிய தீ உண்டா? உண்டு. அதுவே சூரியன். பூமியில் ஏரி, குளம், கடல் முதலியவற்றிலுள்ள ஜலத்தைச் சூரியன் தன் உஷ்ணமான கிரணங்களால் சுண்டச் செய்து நீராவியாக மேலே கிளம்பி மேகங்களாக்கி மழையை வருஷிக் கச் செய்கிறது. அப்படி வருஷிக்கும் நீரே ஆற்று நீராகிறது.

ஆகையால் ஒரு நதியின் உற்பத்திக்கு ஆதிகாரணம் சூரியனென்றே தெரிகிறது.



## 32. காசிப் பட்டணம்.

வெகுகாலமாக மிக்க பெருமையுடன் விளங்கும் புண் ணிய க்ஷேத்திரங்களுள் காசிநகரம் ஒன்று. வட இந்தியாவில்

ஆரியர்கள் குடியேறின காலம் முதற்கொண்டே அந்தப் பட்டணம் இருந்து வருவதாகச் சொல்லலாம்; ஆனாலும் அவ்வாறு நிச்சயமாகச் சொல்லுவதற்குத் தக்க ஆதாரமொன்றும் இல்லை. நம்முடைய பழைய கிரந்தங்களிலும் புராணங்களிலும் காசியைப்பற்றிய சமாசாரம் அடிக்கடி வருகிறது. ஆனதால் இந்துமதம் உண்டானது முதலே அந்த நகரம் பிரசித்தி பெற்றிருக்கிறதென்று உத்தேசமாகச் சொல்லலாம். அதனுடைய பழைய சரித்திரம் முற்றிலும் விளங்காமையால் அதனுடைய வரலாறு இப்படிப்பட்டதென்று சொல்ல முடியவில்லை.

ஒவ்வொரு தேசத்தாரிடத்திலும், ஜாதியாரிடத்திலும் அவரவர்களுடைய சரித்திரம் எழுத்து மூலமாய் இருக்க, நமது தேசத்தாரிடத்தில் மட்டும் அந்த வழக்கம் பெரும்பாலும் இல்லை. உலகத்தில் உள்ள எல்லாப் புத்திமான்களும் வியந்து சந்தோஷிக்கும்படி பல சாஸ்திரங்களை யுண்டாக்கி நுட்பமான ஆராய்ச்சிகள் செய்த நமது தேசத்தார் அந்த அந்தக் காலங்களில் நடந்த சரித்திரங்களையும் விஷயங்களையும் எழுதாமல் விட்டது பெரிய நஷ்டமே.

கௌதமருடைய காலம் இப்போதைக்கு 25 - நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதென்று பலர் ஊகிக்கிறார்கள். அவருடைய காலத்தில் காசி நல்ல ஸ்திதியில் இருந்ததென்பது நிச்சயம். அதற்கு முற்பட்டு எவ்வளவு காலமாக அது அப்படியிருந்ததென்று சொல்லமுடியாது. பாபிலன் நகரம் மேன்மையடைவதற்கு முன்னும், எதன்ஸ் விருத்தியடையவதற்கு முன்னும், உரோமாபுரியின் பெயர் கிளம்புவதற்கு முன்னும் காசி மேன்மையான ஸ்திதியில் இருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. எகிப்துதேசத்துக் கோபுரங்கள் கட்டியபோதுகூடக் காசி இருந்ததாகச் சொல்லலாம். அநேகம் பெரிய பட்டணங்கள் நீடித்திருந்தும் வரவர மகிமைகுறைந்து முடிவில் இருந்த இடம் தெரியாமற் போயிருக்கின்றன. அவ்வாறில்லாமல் காசி க்ஷேத்திரம் எப்போதும் ஒரே மாதிரியாகப் புகழ்பொருந்தி விளங்குவது அதன் பெருமையைச் செவ்வையாகப் புலப்படுத்துகிறது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு யாத்திரையாகவந்த ஒரு சீனர் அந்தக்காலத்தில் காசி இருந்த நிலைமையைப்பற்றி அடியில்வருமாறு சொல்லியிருக்கிறார்:

"கங்கைக்கு அடுத்தும் அதற்கு மேற்கிலும் 6-மைல் நீளமும், 2-மைல் அகலமும் உள்ள ஒரு பெரிய பட்டணம். அதில் 10,000-த்துக்கு அதிகமான வீடுகள் அடங்கியுள்ளன. ஜனத்தொகையும் அதிகம்; வர்த்தகர்கள் அநேகர் இருக்கிறார்கள். ஜனங்கள் மிக்க நாகரிகம் உடையவர்கள்; நல்ல படிப்பாளிகள்; பூமி சாரமுள்ளது. அங்கே ஏறக்குறைய நூறு கோவில்கள் உண்டு. உலக சிந்தனையைவிட்டு ஈசுவரனையே தியானம் பண்ணிக்கொண்டு 10,000 சந்நியாசிகள் வரையில் இருக்கிறார்கள்."

அதற்கப்பால் இப்போது ஆயிரம் வருஷத்துக்குமேலாகியும் அந்த நகரம் அழகும் பெருமையும் குறையாமல் இருக்கிறது. நதியினின்று பட்டணத்தைத் திரும்பிப் பார்த்தால் கண்ணுக்கு மிகவும் இனிமையாக இருக்கும் அதைக்காட்டிலும் இனிய காட்சி வேறு எங்கும் இராது. நூறு வருஷங்களுக்குமுன்பு இருந்த மக்காலே என்னும் ஆங்கிலேய சரித்திர நிபுணர் அதைப்பற்றி,

"ஐசுவரியத்திலும், மேன்மையிலும், இயற்கையிலும் ஆசியாகண்டத்துச் சிறந்த நகரங்களுள் காசி ஒன்று. எப்போதும் ஜனங்களின் கூட்டம் நிறைந்திருக்கும்; தெருக்களிலிருந்து நதியில் ஸ்நானம்பண்ணும் இடங்களுக்குக் கட்டியிருக்கும் கருங்கற்படிகள் ஜனங்கள் நடந்து நடந்து தேய்ந்துபோகின்றன. அதன் கோவில்களும், கல்விச்சாலைகளும் வெகு தூரத்திலுள்ள ஜனங்களை இழுக்கின்றன. அங்கே கங்கையில் உயிரைவிட்டால் நல்ல கதி கிடைக்குமென்று எண்ணி அதற்காக அங்கே வருபவர்களும் உண்டு. வியாபார விஷயமாக வெளியிடங்களிலிருந்து அநேகம் வியாபாரிகள் வந்த வண்ணமாகவே யிருப்பார்கள். அதிலுள்ள அருமையான பொருள்களை ஏற்றிக் கொண்டுபோக நதியோரத்தில் பெரிய பெரிய கப்பல்கள் நிற்கும்" என்று எழுதியிருக்கிறார்.

காசி என்றால் சிறப்புள்ளது என்று அர்த்தம். இந்துக்களுள் இந்தப் பெயர்தான் பெரும்பாலும் வழங்கிவருகிறது. மற்றவர்கள் அதனை "பனாரிஸ்" என்று சொல்லுகிறார்கள். அந்தச் சொல்லுக்கு அர்த்தம் பலர் பலவிதமாகச் சொல்லுகிறார்கள். நல்லதண்ணீர் என்று அதற்குப் பொருள்கொண்டு கங்காநதிக்கரையில் இருப்பதுபற்றி அந்தப் பட்டணத்துக்கு

அந்தப் பெயர் வந்ததென்று சிலர் சொல்லுகிறார்கள். பர்ணு வாரணு அல்லது வாரணு ஆஸி என்று பிரித்து அந்தப் பெயர்களையுடைய இரண்டு சிறிய நதிகள் பட்டணத்துக்கு வடக்கிலும் தெற்கிலும் ஓடுவதால் வாரணுஸி அல்லது பனாரிஸ் என்னும் பெயர் கிடைத்ததென்றும், அங்கே ஆண்ட அரசர்களுள் பர்ணு என்னும் பெயர்கொண்ட ஓர் அரசன் தன் பெயரை அதற்கு இட்டானென்றும் சிலர் சொல்லுகிறார்கள். பர்ணு ஆஸி என்ற நதிகளை வடக்கெல்லையாகவும் தெற்கெல்லையாகவும் உடையது என்று பழைய கிரந்தங்களில் சொல்லியபடி இப்போது இராமல் அந்த நகரம் பர்ணுவுக்குத் தெற்கே முக்கால் மைல் ஒதுங்கியும் ஆஸியைத்தாண்டி அதற்குத் தெற்கே விஸ்தாரமாகவும் இருக்கிறது. ஆஸிக்குத் தெற்கேயுள்ள கட்டிடங்கள் புதுமையாகத் தோற்றுவதையும், பர்ணுவிற்கு அருகில் கிலமான கட்டிடங்கள் காணப்படுவதையும் இதற்கு ஆதாரமாகச் சொல்லலாம்.

காசி யரசர்களுடைய பழைய கோட்டை கங்கையோடு பர்ணு கலக்கும் இடத்தில் இருந்தது; வாரன் ஹேஸ்டிங்க்ஸ் என்னும் முதலாம் கவர்னர்ஜனரல் காலத்தில் இருந்த சைத்சிங்கு என்னும் அரசருடைய கோட்டை அதற்குத் தெற்கே நான்குமைல் தூரத்தில் இருக்கிறது. இப்போது அரசர் வசிக்கும் கோட்டையோ இன்னும் ஒருமைல் தெற்கே தள்ளியிருக்கிறது. அந்த அந்தக் காலங்களில் இருந்த அரசர்கள் ஜனங்கள் நெருங்கிய இடத்தில் வசித்திருப்பார்களென்று எண்ணிக்கொண்டால் பட்டணம் தென்பக்கமாக ஒதுங்கி வந்திருக்கிறதென்பதற்கு இதுவும் ஆதாரமாகும்.

காசியில் மிகவும் பழைய கட்டிடங்கள் பௌத்தருடைய கோயில்களும், மண்டபங்களும், ஸ்தம்பங்களும், பீடங்களும், பிரதிமைகளுமாகும். பௌத்தர்கள் சிறந்த வேலைக்காரர்கள். எத்தனை காலமானாலும் பலமாக நிற்கும்படி 18 அங்குலம் நீளமும், 13 அங்குலம் அகலமும், 3 அங்குலம் கனமும் உள்ள செங்கல்லினாலும், வேறு அழகான கல்லினாலும் கட்டியிருக்கிறார்கள். இந்துக்களுடைய கோயில்களும், குளங்களும், கிணறுகளும் இன்னகாலத்தில் உண்டானவையென்று தெரியவில்லை. ஆனாலும் அவைகள் யாவும் பௌத்தர்களுடைய கட்டிடங்களுக்குப் பிந்தியவைகளே.

மற்றக் கோவில்களைக்காட்டிலும் முற்பட்டவை யென்று எண்ணத்தக்க கோவில்கள் ஆறு உண்டு. அவைகள் இப்போது பெரும்பாலும் சீர்குறைந்திருக்கின்றன. நாகக்கிணறு என்று சொல்லப்பட்ட அற்புதமான ஒரு கிணறு நாற்புறங்களிலும் செங்குத்தான கற்களால் கட்டப்பட்ட ஒரு குளம்போல் இருக்கிறது. அதன் மத்தியில் சதுரமாகப் பிள்ளைக்கிணறு போல் ஒன்று இருக்கிறது. அங்கிருந்து 12 படி இறங்கினால் ஜலத்தை எட்டலாம்; அதிலிருந்து வேறொரு சிறிய உட்கிணற்றுக்கு ஒருவழி இருப்புச்சட்டத்தினால் மூடப்பட்டிருக்கிறது. ஔரங்கசிப் சக்கரவர்த்தி ஒரு பெரிய கோவிலை இடித்து அதன்மேல் ஒரு மசூதியைக் கட்டியிருக்கிறார்.

கி.பி. 1693-ஆம் வருஷத்தில் பட்டத்துக்குவந்த ஜயஸிங் என்னும் காசிமன்னர் கட்டிவைத்த ஜோதிஷமண்டபம் அழகாக இருக்கிறது. அந்த அரசர் கணித சாஸ்திரத்தில் மிக்க தேர்ச்சிபெற்றவர். பிரத்தியட்ச நிதரிசனத்துக்கு ஒத்துவராமல் தவறிப்போயிருந்த பஞ்சாங்கத்தைத் திருத்தும்படி டில்லிசக்கரவர்த்தி அவரைக் கேட்டுக்கொள்ள அவர், ஜோதிஷக் கணக்குகள் கணிப்பதற்காக, வடமதுரை, காசி, டில்லி, உஜ்ஜயினி, ஜயபுரம் இந்த இடங்களில் ஜோதிஷ உப்பரிகைகள் கட்டுவித்தார். காசியில் மானஸரோவாம் என்னும் சிறந்த தடாகத்தை வெட்டுவித்தவரும் அந்த அரசரே. இப்போது ஆங்கிலேயருடைய அரசாட்சியினால் காசிநகரத்துக்கு அநேக நன்மைகள் உண்டாயிருக்கின்றன. முன்பு காசிக்கு யாத்திரை போவதென்றால் மிகவும் கஷ்டம். இப்போது மிகவும் சுலபம். பலவிடங்களிலிருந்து ஜனங்கள் அவ்விடத்தில் வந்து சேருகிறார்கள். அவர்களுள் இந்துக்களே அதிகம் அவர்களும் தனவந்தர்கள். மற்றப் பெரிய பட்டணங்களைப் போல் காசி நோய்க்கிடமானதல்ல. வீடுகள் கல்லினால் பல அடுக்காகக் கட்டப்பட்டிருக்கின்றன. கீழே இடம் போதாமையால் ஒரே வீட்டுக்குப் பல மேல்மெத்தைகள் கட்டப்பட்டுள்ளன.

தெருக்கள் நெருக்கமாகவும் ஒழுங்கில்லாமலும் இருக்கும். புதிய வீடு கட்டுவதென்றால் அங்கே மிக்க செலவு பிடிக்கும். ஆதலால் ஒரு வீட்டிலேயே 10, 12 குடிகள்

உண்டு. தெருக்களை விசாலப்படுத்துவது எளிதல்ல. காசியில் விசேஷித்த செல்வம்படைத்த சாவகாரிகளால் வியாபாரம் செவ்வையாக நடக்கிறது. அங்கே காசுக்கடை, ஜவுளிக்கடை முதலியன விசேஷமாக உண்டு. பட்டணத்தைக் காட்டிலும் கங்காதீரம் மிகவும் விசேஷமானது. அதில் ஸ்நான கட்டிடங்கள், படித்துறைகள், ஜபமேடைகள், அன்ன சத்திரங்கள் முதலியன அதிகம். இன்னும் காசியைப்பற்றித் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்கள் பல உண்டு.



ஔவையார் அருளிச்செய்த

மூதுரை என்று வழங்குகின்ற

# வாக்குண்டாம்

(சுருக்கம்)

---

1. நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்.

(கருத்துரை.) தென்னை மரமானது தான் உண்ட வெறும் நீருக்குப்பதிலாக இளநீரைத்தானே கொடுத்தலால் ஒருவனுக்கு உபகாரத்தைச் செய்யும்போது பிரதி யுபகாரத்தை அவன் எப்போது செய்வானோ என்று எண்ணவேண்டாம்.

(அரும்பதவுரை.) நன்றி – உபகாரம்; ஒருவற்கு – ஒருவனுக்கு; தருங்கொல்—தருவானோ; தெங்கு—தென்னை; தாள்—அடி.

2. நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கன்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்.

(க—ரை.) நல்ல குணமுள்ள ஒருவருக்குச் செய்யும் உதவியானது கல் வெட்டைப்போல் அழியாமல் இருக்கும்; அன்பில்லாதவருக்குச் செய்யும் உபகாரம் ஜலத்தின்மேல் எழுதும் எழுத்துக்கு ஒப்பாகும்.

(அ—ரை.) நல்லார்—நல்லகுணமுடையவர்; காணும்—தோன்றும்; ஈரமிலா—அன்பில்லாத; ஈந்த—செய்த; நேர்—ஸமானம்.

3. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

(க—ரை.) எவ்வளவு காய்ச்சினுலும் பாலானது சுவையில் குறை யாது; ஸ்நேகத்தன்மை இல்லாதவர்கள் எவ்வளவு கலந்திருந்தாலும் நண்பராகார்; மேலோர் செல்வங் குறைந்தகாலத்திலும் மேலோராகவே யிருப்பர்; சுட்டாலும் சங்கு வெள்ளை நிறத்தையே தரும்.

(அ—ரை.) அட்டாலும்- காய்ச்சினுலும்; சுவை -ருசி; குன்ருது— குறையாது; அளவளாய்—அளவளாவி, கலந்து; நட்டாலும்—சிநேகித்தா லும்.

4. அடுத்து முயன்ருலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா.

(க—ரை.) மிகவும் உயரமாக வளரும் மரங்களும் பருவத்திலே தான் பழத்தைக் கொடுக்கும்; அதுபோல எவ்வளவு சிரமப்பட்டாலும் எடுத்துக்கொண்ட காரியங்கள் வேளைவந்தாலன்றிக் கைகூட மாட்டா.

(அ—ரை.) முயன்ருலும் – பிரயாசைப்பட்டாலும்; கருமங்கள்— காரியங்கள்; உருவம்—வடிவம்; பழா—பழுக்கமாட்டா.

5. உற்ற இடத்தில் உயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்.

(க—ரை.) கருங்கல் தூணனது பாரத்தினல் பிளந்துபோமே யல் லாமல் வளைந்து கொடுக்காது. அதுபோல மானமுள்ளோர் மானக் கேடுவந்த காலத்தில் உயிர்விடுவரே யல்லாமல் பகைவர்களைக் கண்டு வணங்கமாட்டார்.

(அ—ரை.) பணிவரோ – வணங்குவாரோ; கற்றூண் -- கல்தூண்; இறுவதல்லால்—முறிவதல்லாமல்; தாங்கின்—தாங்கினல்.

6. நீரளவே ஆகுமாம் நீராம்பல்; தான்கற்ற
நூலளவே ஆகுமாம் நுண்ணறிவு மேலைத்
தவத்தளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்;
குலத்தளவே ஆகுங் குணம்.

(க—ரை.) ஜலத்தில் வளரும் அல்லியானது ஜலமட்டத்துக்கு மேல் வளராது; அதுபோல ஒருவனுடைய நுண்ணறிவானது அவ

னது கல்விக்குத் தக்கபடி யிருக்கும்; முற்பிறப்பிற்செய்த தவத்துக்குத் தக்கபடி இருக்கும் ஒருவனுடைய செல்வம்; குலத்துக்கேற்றபடி யிருக்கும் குணம்.

(அ—ரை.) ஆம்பல்—அல்லி; நுண்ணறிவு—நுட்பமான ஞானம்.

7. நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோ
டிணங்கி இருப்பதுவும் நன்று.

(க—ரை.) நல்லவர்களைப் பார்த்தலும், அவர்களுடைய பேச்சைக் கேட்பதும், அவர்களுடைய குணங்களை எடுத்துச் சொல்லுதலும், அவர்களோடு பழகுதலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) நன்றே—நல்லதே; இணங்கி—கலந்து.

8. தீயாரைக் காண்பதுவும் தீதே; திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே;—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோ
டிணங்கி இருப்பதுவும் தீது.

(க—ரை.) தீயவர்களைப் பார்ப்பதும், அவர்களுடைய வார்த்தையைக் கேட்பதும், அவர்களுடைய குணங்களை எடுத்துக்கூறலும், அவர்களோடு பழகுதலும் கெடுதலை விளைவிக்கும்.

(அ—ரை.) தீயார்—கெட்டகுணமுடையார்; தீது—கெட்டது.

9. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல், அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை.

(க—ரை.) நெற்பயிருக்கு இறைக்கும் ஜலமானது பக்கத்திலுள்ள புல்லுக்கும் உணவாகிறது; அப்படியே நல்லவர் ஒருவர் இருந்தால் அவரை உத்தேசித்து எல்லாருக்கும் மழைபெய்கிறது.

(அ—ரை.) இறைத்த—பாய்ச்சின; பொசியும்—பாயும்; தொல் உலகில்—பழமையான உலகத்தில்.

10. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்.

(க—ரை.) முதலில் முளைப்பது அரிசியானாலும், மேலேயுள்ள உமி இல்லாவிட்டால் அது முளைக்காது; அதுபோல மிக்க வன்மை யுடையவர்களுக்கும் சாதனங்கள் இல்லாவிட்டால் எடுத்துக்கொண்ட காரியம் நிறைவேறாது.

(அ—ரை.) பண்டு – முன்னே; விண்டுமிபோனால் - உமிவிண்டு போனால்; ஆற்றல்—சக்தி

11. மடல்பெரிது தாழை; மகிழினிது கந்தம்;
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரும் ஆகாது அதனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும்.

(க—ரை.) தாழை பெரியமடலை யுடையதாயிருந்தாலும் வாசனை யில் சிறிய மகிழம் பூவுக்கு ஈடாகாது; பெரிய கடலிலுள்ள நீர் அழுக் கைப்போக்குதற்கும் தகுதியற்றது. அதன் அருகிலுள்ள ஊற்றின் ஜலமானது குடிக்கத்தக்கதாகும். ஆதலால் உருவத்தில் சிறியவரென்று ஒருவரையும் இகழக்கூடாது.

(அ—ரை.) கந்தம்—வாஸனை; மண்ணீர்=மண்ணும்நீர்—அழுக்கைப் போக்கும் நீர்; சிற்றூறல்—சிறு ஊறல்—சிறிய ஊற்று; உண்ணீர்—உண் நீர்—சாப்பிடத்தக்க ஜலம்.

12. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்.

(க—ரை.) காட்டில் கிளைகளோடும் கொம்புகளோடும் கூடிய நல்ல மரங்கள் மரங்களாக மாட்டா; சபையில் படிக்கக்கொடுத்த ஓலை யைப் படிக்க முடியாதவனும், குறிப்பை அறிந்துகொள்ள முடியாதவ னுமே நல்ல மரங்கள் ஆவர்.

(அ—ரை.) கவை-கிளை; காட்டகத்தே-காட்டிலே; அவை—ஸபை; நீட்டு ஓலை-நீட்டிய ஓலை; வாசியா-படியாமல்; நன்மரம்—நல்லமரங்கள்.

13. **கா**ன மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினால் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

(க—ரை.) முறைப்படி படிக்காதவனுடைய கவியானது மயிலைப் பார்த்த வான்கோழி தன் சிறகை விரித்து ஆடுவதற்கு ஸமானமாகும்.

(அ—ரை.) கானம்—காடு; பாவித்து—எண்ணி; பொல்லா—பொல்லாத—அழகில்லாத; கல்லாதான்—படியாதவன்; கற்ற—படித்த.

14. **வே**ங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகாரம் ஆனாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம்.

(க—ரை.) வேங்கைப்புலிக்கு விஷத்தை நீக்கின விஷவைத்தியன் அப்புலிக்கு இரையானதுபோல, அற்பர்களுக்குச்செய்த உதவியானது கல்லின்மேலெறிந்த மண்பாத்திரமாகும்; அதாவது வீணாகும்.

(அ—ரை.) வேங்கை வரிப்புலி—வரி வேங்கைப்புலி—கோடுகளையுடைய வேங்கைப்புலி; நோய்—விஷநோய்; விடதாரி—விஷவைத்தியன்; பாங்கு அறியா—செய்ந்நன்றி அறியாத; புல்லறிவாளர்—அற்ப புத்தியுள்ளவர்; இட்ட—போட்ட; கலம்—பாத்திரம்.

15. **அ**டக்கம் உடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா;—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு.

(க—ரை.) கொக்கானது அடிமடையில் ஓடுகின்ற சிறு மீன்களை விட்டுவிட்டு, பெரிய மீன் வரும்வரையில் ஒடுங்கியிருக்கும்; ஆதலால் அடங்கியிருப்பவர்களை அறிவில்லாதவரென்று நினைத்து அவர்களை வெல்ல நினைக்கவும் கூடாது.

(அ—ரை.) அறிவிலர்—அறிவில்லாதவர்; கடக்க—வெல்ல; மடைத்தலை—தலைமடை—அடிமடை; உறும்—தகுதியான; வாடி—அடங்கி.

16. அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு.

(க—ரை.) குளத்தில் நீர்வற்றியவுடன் அதை விட்டு ஓடிப்போகும் பறவைகள்போலவே ஒருவருக்குத் தரித்திரம் வந்தவுடன் அவரைவிட்டு நீங்குபவர் உண்மையான உறவினர் அல்லர்; அக்குளத்தை விட்டு நீங்காத கொட்டி ஆம்பல் முதலியவற்றைப்போலவே தாமும் உடனிருந்து வருத்தத்தை அடைபவரே உண்மையான உறவினராவர்.

(அ—ரை.) அற்ற—நீர்வற்றிய; குளத்தின்—குளத்திலிருந்து; அறு நீர்ப்பறவை—நீங்கும் நீர்ப்பறவைகள்; உற்றுழி=உற்ற உழி—(தரித்திரம் அல்லது துன்பம்) வந்தகாலத்தில்; தீர்வார்—நீங்குபவர்; ஒட்டி—கலந்து; உறுவார்—அனுபவிப்பவர்.

17. சீரியர் கெட்டாலும் சீரியரே; சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும்?—சீரிய
பொன்னின் குடமுடைந்தால் பொன்னாகும்; என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்.

(க—ரை.) பொன்னாலாகிய குடம் உடைந்தாலும் பொன்னாகும்; மட்குடம் உடைந்தால் ஒரு பயனுமில்லை; அதுபோல் பெரியோர் கெட்டாலும் பெரியோராகவே மதிக்கப்படுவர்; கீழோர் கெட்டால் அவரை ஒருவரும் மதியார்.

(அ—ரை.) சீரியர்—சிறப்பை யுடையவர், பெரியோர்; என்னாகும்—என்ன ஆகும்; உடைந்தக்கால்—உடைந்தால்.

18. ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி—தோழி!
நிதியும் கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன்.

(க—ரை.) ஒரு படியைக்கொண்டு எவ்வளவு ஆழமான ஜலத்தில் மொண்டாலும் ஒருபடி ஜலம் மொள்ளலாமேயன்றி அதிகமாக மொள்ள முடியாது. அதுபோல, திரவியமும் கணவரும் மாதர்க்குக் கிடைத்தாலும் அவரவர் விதிப்பயன்படியே அனுபவிப்பர்.

(அ—ரை.) ஆழ — ஆழமாக; அமுக்கி — அழுத்தி; முகக்கினும்—மொண்டாலும்.

19. உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா;
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும்;
அம்மருந்து போல்வாரும் உண்டு.

(க—ரை.) நோயானது உடம்போடுகூடவே பிறந்து கொன்று விடும்; உடன்பிறவாத மலைமருந்து வியாதியை நீக்கும்; ஆதலால் கூடப்பிறந்தவரை உறவினரென்று நினைத்தல் கூடாது; அம்மருந்தைப்போன்றவரும் உலகத்தில் உண்டு.

(அ—ரை.) மாமலை—பெரியமலை; பிணி—நோய்; அம்மருந்துபோல்வார்—அந்த மருந்தை ஒப்பவர்.

20. இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை;
இல்லாளும் இல்லாளே ஆமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல், அவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்.

(க—ரை.) நற்குண நற்செய்கைகள் அமைந்த மனைவியிருக்கும் வீடானது எல்லாப் பொருள்களையும் உடையதாக இருக்கும்; அவையில்லாத மனையாள் இருக்கும் வீடானது புலியிருந்த புதருக்கு ஒப்பாகும்.

(அ—ரை.) இல்லாள்—மனைவி; அகத்து இருக்க—வீட்டில் இருக்க; வலிகிடந்தமாற்றம் – கடுமைதங்கிய சொல்; உரைக்குமேல் – சொன்னால்; அவ்வில்=அ இல்—அந்த வீடு; தூறு—புதர்.

21. எழுதியவா றேகாண்: இரங்குமட நெஞ்சே!
கருதியவா றாமோ கருமம்?—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்
முற்பவத்தில் செய்த வினை.

(க—ரை.) ஒரு காரியமானது விதியின்படி நடக்குமேயன்றி எண்ணப்படி நடவாது; நினைத்தவற்றையெல்லாம் கொடுக்கும் கற்பக விருட்சத்தை ஒருவன் அடைந்தும், தன் வினைப்பயனால் எட்டிக் காயையே அடைவான்.

(அ—ரை.) கருதியவாறு—எண்ணியபடி; கருமம்—காரியம்; காஞ்சிரங்காய்—எட்டிக்காய்; ஈந்தது—கொடுத்தது; பவம்—பிறப்பு.

22. கற்பிளவோ டொப்பர் கயவர்; கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே—விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்ருேர் சினம்.

(க—ரை.) கோபத்தால் வேறுபட்ட கீழ்மக்கள் மறுபடி கூடா மலே யிருப்பர்; சில சமயங்களில் கூடினுலும் கூடுவர்; பெரியவர்களுடைய கோபமானது அதி சீக்கிரத்தில் மாறிவிடும்.

(அ—ரை.) கற்பிளவோடொப்பர்—கல்லின்பிளவையொப்பர்; கயவர்—கீழ்மக்கள்; கடுஞ்சினத்து—கடுமையான கோபத்தில்; பொற்பிளவு—பொன்னின் பிளவு; சீர் ஒழுகு—சிறந்தவழியில் நடக்கிற; சான்ருேர்—பெரியவர்; சினம்—கோபம்.

23. நற்ருமரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்;—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்: முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்.

(க—ரை.) அன்னபட்சிகள் தாமரைத் தடாகங்களை விரும்பிச் சேரும்; காக்கைகள் பிணங்களை விரும்பிச் செல்லும்; அதுபோல, படித்தவரைப் படித்தவர் விரும்பி நட்புறுவர்; கீழ்மக்களைக் கீழ்மக்கள் விரும்புவர்.

(அ—ரை.) நற்ருமரைக்கயத்தில்—நல்ல தாமரைக் குளத்தில்; நல்லன்னம்—நல்ல அன்னபட்சி; காமுறுவர்—விரும்புவர்; கற்பிலா—கல்வியில்லாத; மூர்க்கரை—கீழ்மக்களை; முகப்பர்—விரும்புவர்; முதுகாடு—சுடுகாடு; உகக்கும்—விரும்பும்.

24. நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்;
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சில்
கரவுடையார் தம்மைக் கரப்பர்; கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.

(க—ரை.) விஷத்தையுடைய நல்லபாம்பானது மறைந்து வசிக்கும்; விஷமில்லாத நீர்ப்பாம்பானது வெளியே கிடக்கும்; அதுபோல வஞ்சனையுள்ளவர்கள் ஒளிந்து திரிவார்கள்; வஞ்சனை யில்லாதவர்கள் தங்களை மறைக்கமாட்டார்கள்.

(அ—ரை.) நஞ்சுடைமை-விஷத்தை உடைத்தாயிருத்தல்; கரந்து-ஒளிந்து; உறையும்-வசிக்கும்; அஞ்சா—அஞ்சாமல்; புறம்-வெளியே; கரவுடையார்—வஞ்சனையுள்ளவர்; கரவார்—ஒளிக்கமாட்டார்.

25. மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனின் கற்றோன் சிறப்புடையன்;—மன்னற்குத்
தன்றேச மல்லால் சிறப்பில்லை; கற்றோற்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு.

(க—ரை.) தன் தேசத்தில்மட்டும் அரசனுக்குச் சிறப்புண்டு; படித்தவர்களுக்கு எந்த இடத்திலும் பெருமையுண்டு. ஆதலால் அரசர்களைக்காட்டிலும் படித்தவர்கள் சிறந்தவர்கள்.

(அ—ரை.) மாசு அற—குற்றம் நீங்க; கற்றோனும்—படித்தவனும்; மன்னனின்—அரசனைக்காட்டிலும்; மன்னற்கு—மன்னனுக்கு.

26. கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்;
அல்லாத மாந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம்; கூற்றமே
இல்விற் கிசைந்தொழுகாப் பெண்.

(க—ரை.) வாழைமரத்துக்கு அதன் காயே யமனாகும்; கல்லாதவர்களுக்குக் கற்றவர்களுடைய சொல்லே யமனாகும்; தீயவர்களுக்கு, தருமம் யமனாகும்; கணவன் மனத்துக்கு இசைந்து நடவாத பெண் வீட்டிற்கு யமனாகும்.

(அ—ரை.) மாந்தர் – மனிதர்; கூற்றம் – யமன்; இல்விற்கு – வீட்டிற்கு; ஒழுகா-நடவாத.

27. சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா தாதலால்—தந்தம்
தனஞ்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கெட்டால்,
மனஞ்சிறியர் ஆவரோ மற்று.

(க—ரை.) சந்தனக் கட்டையானது தேய்ந்தாலும் வாசனையிற் குறைவுபடாது; பெரிய அரசர்கள் பொருளிற் குறைந்தாலும் மனவுறுதியை விடமாட்டார்கள்.

(அ—ரை.) சந்தன மென்குறடு—மெல்லிய சந்தனக்கட்டை; கந்தம்—வாசனை; தந்தம்—தம்தம்; தார்வேந்தர்—சேனையையுடைய அரசர்.

28. மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவும் உயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போ தவளோடு மாகுமவள் பிரிந்து
போம்போ தவளோடும் போம்.

(க—ரை.) லக்ஷ்மிகடாக்ஷம் உள்ள வரையில் ஒருவனுக்குப் பந்துக்கள் நிரம்பி இருப்பார்கள்; ஐசுவரியமும் அழகும் குலமும் பொருந்தியிருக்கும்; லக்ஷ்மிகடாக்ஷம் நீங்கினுல் எல்லாவற்றையும் அவன் இழப்பன்.

(அ—ரை.) சுற்றம்—பந்து; வான்பொருள்—சிறந்த ஐசுவரியம்; உரு—அழகு; திருமடந்தை—லக்ஷ்மிதேவி.

29. சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்;—மாந்தர்
குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்.

(க—ரை) மரமானது தன்னை வெட்டுவோனுக்கே நிழலைத்தரும்; பிறர் தமக்குத்தீமைசெய்தாலும் அறிவுடையோர் பொறுத்துக்கொள்வர்.

(அ—ரை.) சாந்தனையும் — சாகும் அளவும்; தீயனவே — தீமைகளையே; ஆந்தனையும்—ஆகுமளவும்; குறைக்குந்தனையும் — வெட்டும் வரையிலும்; தனை—அடவு.



பூதஞ்சேந்தனுர் அருளிச்செய்த

# இனியது நாற்பது

(சுருக்கம்)



30. யானை யுடைய படைகாண்டல் மிகவினிதே
ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே
கான்யாற் றடைகரை யூரினி தாங்கினிதே
மான முடையார் மதிப்பு.

(க—ரை.) யானைப்படையைப் பார்த்தலும், மாமிசந்தின்று சரீரத்தைப் பருக்கச் செய்யாமையும், காட்டாற்றுக்குப் பக்கத்தில் உள்ள ஊரில் இருத்தலும், பெருமையை யுடையவர்களால் மதிக்கப்படுதலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) படை — சேனை; காண்டல்—பார்த்தல்; இனிது — நல்லது; ஊன்—மாமிசம்; கான்யாறு—காட்டாறு; மானம்—பெருமை.

31. ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

(க—ரை.) கூடிய அளவு தருமஞ்செய்தலும், நல்ல நெறியுள்ளவர்களுடைய வார்த்தையும், அலிகளல்லாதவர்களைக் காவலாக வைத்துக் கொள்ளுதலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) ஆற்றுந்துணை—கூடிய அளவு; அறம் செய்கை—தருமஞ் செய்தல்; பயம் மொழி—பயனுடைய சொல்; வலவை—அலி; கோடல்—கொள்ளுதல்.

32. கடமுண்டு வாழாமை காண்ட லினிதே
நிறைமாண்பில் பெண்டிரை நீக்க லினிதே
மனமாண்பி லாதாரை அஞ்சி அகறல்
எனைமாண்பு தானினிது நன்கு.

(க—ரை) கடன்பட்டு வாழாதிருத்தலும், மனைமாட்சியில்லாத மனைவியை நீக்கி விடுதலும், வஞ்சகரைவிட்டு நீங்குதலும் இனியவைகளாம்.

(அ—ரை.) கடம் — கடன்; மாண்பில்—மாண்பு; இல்—மாட்சியில்லாத; பெண்டிர்—மனைவிகள்; அகறல்—விலகுதல்.

33. அதர்சென்று வாழாமை ஆற்ற இனிதே
குதர்சென்று கொள்ளாத கூர்மை இனிதே
உயிர்சென்று தான்படினும் உண்ணார்கைத் துண்ணாப்
பெருமைபோற் பீடுடைய தில்.

(க—ரை.) வழிபறித்து வாழாமையும், நூற்பொருளை உள்ளபடி அறியும் அறிவு நுட்பமும், உண்ணத் தகாதவருடைய கைப்பொருளை உண்ணாமையும் இனியவைகளாம்.

(அ—ரை.) அதர்—வழி; ஆற்ற—மிக; குதர்—தப்புவழி; கூர்மை—நுட்பம்; கைத்து—கையிலுள்ளது; பீடு—பெருமை.

34. குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி யினிதே
மயலிகள் அல்லராய் மாண்புடையார்ச் சேரும்
திருவும் தீர்வின்றேல் இனிது.

(க—ரை.) குழந்தைகள் நோயின்றி வாழ்தலும், சபைக்கு அஞ்சாதவனது கல்வியும், பெரியாரைச் சேர்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) குழவி—குழந்தை; கழறும்—பேசுகிற; மயலிகள்—மயக்கமுடையவர்கள்; திருவும்—பாக்கியமும்; தீர்வு—நீங்குதல்.

35. மான மழிந்தபின் வாழாமை முன்இனிதே
தானம் அழியாமை தானடக்கி வாழ்வினிதே,
ஊனமொன் றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

(க—ரை) மானம் கெட்டபின் உயிர்வாழாமையும், தன்னுடைய இருப்பிடம் கெடாமல் அடங்கி நடத்தலும், குற்றம் ஒன்றுமில்லாமல் மிக்க பொருளைப் பெற்றிருத்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) அழிந்த—கெட்ட; தானம் = ஸ்தானம் – இருப்பிடம்; ஊனம்—குறைவு.

36. குழவி தளர்நடையைக் காண்ட லினிதே
அவர்மழலை கேட்டல் அமிழ்தின் இனிதே
வினையுடையான் வந்தடைந்து வெய்துறும் போழ்து
மனனஞ்சா னாகு லினிது.

(க—ரை.) குழந்தைகளுடைய தளர் நடையைப் பார்த்தலும், அவர்கள் மழலைச் சொல்லைக் கேட்டலும், பகைவன் வந்தபோது மனமஞ்சாமையும் இனியவைகளாம்.

(அ—ரை.) அமிழ்தின்—அமிர்தம்போல்; வினையுடையான்—வினைக்கு உரியவன்.

37. கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகவினிதே
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானும் இரவாது தானீதல்
எத்துணையும் ஆற்ற வினிது.

(க—ரை.) படித்தவர்கள் முன்னே தம் கல்வியை வெளிப்படுத்தலும், அறிவுடையாரோடு சேர்ந்திருத்தலும், எள்ளளவேனும் யாசிக்காமல் பிறர்க்குக் கொடுத்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) மிக்கார்—அறிவில் மிகுந்தவர்; மாண—மாட்சிமைப்பட; எட்டுணை = எள்துணை—எள்ளளவு; இரவாது—யாசிக்காமல்; ஈதல்—கொடுத்தல்; எத்துணையும்—எல்லாவற்றாலும்; ஆற்ற—மிக.

38. மன்றில் முதுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழும் தவசிகள் மாண்பினிதே
எஞ்சா விழுச்சீர் இருமுது மக்களைக்
கண்டொழுதல் காலை யினிது.

(க—ரை.) பெரியோர்கள் உள்ள ஊரில் இருப்பதும், தவசிகளுடைய பெருமையும், காலையில் தாய்தந்தையரை வணங்குதலும் இனியவைகளாம்.

(அ—ரை.) மன்றில்—சபையில்; முதுமக்கள்—பெரியவர்கள்; பதி—ஊர்; தந்திரத்தின்—நூல்வழியிலே; எஞ்சா—குறையாத; விழு—பெரிய; இரு முதுமக்கள்—தாய் தந்தையர்; தொழுதல்—வணங்குதல்.

39. நட்டார் புறங்கூறான் வாழ்த னனியினிதே
பட்டாங்கு பேணிப் பணிந்தொழுகல் முன்னினிதே
முட்டில் பெரும்பொரு ளாக்கியக்கால் மற்றது
தக்குழி யீதலே நன்று.

(க—ரை.) நண்பரைப் புறங் கூறாமையும், எல்லார்க்கும் பணிவாய் நடத்தலும், பொருள் தேடினால் தகுந்த இடத்தில் கொடுத்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) புறங்கூறல் — கோள் சொல்லுதல்; பட்டாங்கு — உண்மை நூற்பொருள்; பேணி—விரும்பி; ஒழுகல்—நடத்தல்; முட்டில்—குறைவு இல்லாத; தக்குழி—தகுந்த இடத்தில்; ஈதல்—கொடுத்தல்.

40. பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்த லினிதே
அறம்புரிந் தல்லவை நீக்க லினிதே
மறந்தேயு மாணா மயறிகட் சேராத்
திறந் தெரிந்து வாழ்த லினிது.

(க—ரை.) பிறர்பொருளை விரும்பாமல் வாழ்தலும், தருமஞ்செய்து பாவத்தை நீக்குதலும், மறந்தாயினும் புத்தியில்லாதவர்களிடம் சேராமையும் நல்லவைகளாம்.

(அ-ரை.) வெளவான்-கவர்ந்து கொள்ளாமல்; அல்லவை-புண்ணியமல்லாதவை, பாவங்கள்; மாணு-மாட்சிமைப்படாத; மயறி-அறிவில்லாதவன்; திறம்-உபாயம்.

41. வருவாய் அறிந்து வழங்கல் இனிதே
ஒருவர்பங் காகாத ஊக்கம் இனிதே
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்தல் இனிது.

(க-ரை.) வரும்படிக்கு ஏற்றபடி கொடுத்தலும், ஒருவர்க்குச் சார்பாக இல்லாமலிருத்தலும், பெரும் பயன் வருவதாக இருந்தாலும் நினைத்தவற்றையெல்லாம் செய்யாதிருத்தலும் இனியவைகளாம்.

(அ-ரை.) வருவாய் - வரும்படி; வழங்கல்-கொடுத்தல்; பங்கு-சார்பு; ஊக்கம்-முயற்சி; பெட்டவை-விரும்பியவை; திரிபின்றி-மாறுபாடில்லாமல்.

42. காவோ டறக்குளம் தொட்டல் மிகவினிதே
ஆவோடு பொன்னீத லந்தணர்க்கு முன்னினிதே
பாவமும் அஞ்சாராய்ப் பற்றுந் தொழில்மொழி
சூதரைச் சோர்தல் இனிது.

(க-ரை.) சோலையை வைத்தலும், தருமத்துக்குக் குளம் வெட்டுதலும், பிராமணர்களுக்குப் பசுவையும் பொன்னையும் கொடுத்தலும், பாவத்துக்குப் பயப்படாத வஞ்சகரைக் கைவிடுதலும் நல்லவைகளாம்.

(அ-ரை.) கா-சோலை; தொட்டல்-வெட்டுதல்; ஆ-பசு; அந்தணர்-பிராமணர்; சூதர்-வஞ்சகர்; சோர்தல்-கைவிடுதல்.

43. தானங் கொடுப்பான் தகையாண்மை முன்னினிதே
மானம் படவரின் வாழாமை முன்னினிதே
ஊனங் கொண்டாடார் உறுதி யுடையவை
கோண் முறையாற் கோடலினிது.

(க-ரை.) தானங் கொடுப்பவனது பெருமையும், மானமழிந்து உயிர் வாழாமையும், குற்றம் பாராட்டாமல் குணத்தைக் கொள்ளுதலும் இனியவைகளாம்.

(அ-ரை.) தகையாண்மை-பேராண்மை; ஊனம்-குற்றம்.

44. ஆற்றுனை ஆற்றென் றலையாமை முன்னினிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே
ஆக்க மழியினும் அல்லவை கூறுத
தேர்ச்சியின் தேர்வினிய தில்.

(க—ரை.) செய்ய மாட்டாதவனைச் செய்யென்று வறுத்தாமல் இருத்தலும், யமன் வருவானென்ற உண்மையை நினைத்து வாழ்தலும், செல்வம் அழிந்தாலும் பாவச்சொற்களைச் சொல்லாமையும் நல்லவைகளாம்.

(அ—ரை.) ஆற்றுனை—முடியாதவனை; அலையாமை—வருத்தாமை; கூற்றம்—யமன்; சிந்தித்து—ஆலோசித்து; தேர்ச்சி—தெளிவு.

45. கயவரைக் கையிகந்து வாழ்த லினிதே
உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே
எளிய ரிவரென் றிகழ்ந்துரை யாராகி
ஒளிபட வாழ்தல் இனிது.

(க—ரை.) கீழ்மக்களை நீங்கிவாழ்தலும், உயர்வான காரியங்களில் ஊக்கம் உடைமையும், எளியவரை அவமதியாமல் இருத்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) கயவர் — கீழ்மக்கள்; கை இகந்து—நீங்கி; உள்ளி — நினைத்து; ஒளி—கீர்த்தி.

46. நன்றிப் பயன்தூக்கி வாழ்தல் நனியினிதே
மன்றில் கொடும்பா டுரையாத மாண்பினிதே
அன்றறிவார் யாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியின் நன்கினிய தில்.

(க—ரை.) ஒருவன் செய்த உதவியின் பயனை ஆராய்ந்து வாழ்தலும், சபையிலிருந்துகொண்டு ஒருதலைவழக்கு உரையாமையும், அடைக்கலமாக வைத்ததைப் பாதுகாத்துக்கொடுத்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) நன்றி—உதவு; தூக்கி—ஆராய்ந்து; மன்றில்—சபையில்; கொடும்பாடு — ஒருதலைவழக்கு; வெளவாத—அபகரியாத; நன்றியின்—நன்மைபோல; இனியது இல்—நல்லது இல்லை.

47. அடைந்தார் துயர்கூரா ஆற்ற வினிதே
கடன்கொண்டும் செய்வன செய்த வினிதே
சிறந்தமைந்த கேள்விய ராபினு மாராய்ந்
தறிந்துரைத்தல் ஆற்ற இனிது.

(க—ரை.) தம்மை யடைந்தவர் துன்பமடையாதபடி கவனித்தலும், கடன் வாங்கியும் செய்யவேண்டியவற்றைச் செய்தலும், ஆராய்ந்தறிந்தே ஒன்றைச் சொல்லுதலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) துயர்கூரா—துன்பம் அடையாமல்; ஆற்ற—மிக.

48. எல்லியம் போது வழங்காமை முன்னினிதே
சொல்லுங்கால் சோர்வின்றிச் சொல்லுதல் மாண்பினிதே
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது.

(க—ரை.) இராத்திரிவேளையில் சஞ்சாரம் செய்யாமையும், பேசும்போது முன்பின் செய்திகளை மறவாமல் பேசுதலும், கீழ்மக்களது சிநேகத்தைக் கைவிடுதலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) எல்லியம் போது — இராக்காலம்; வழங்காமை — சஞ்சாரம் செய்யாமை; புல்லிக் கொளினும்—தழுவிக் கொண்டாலும்; கேண்மை—சிநேகம்.

49. பிச்சைபுக் குண்பான் பிளிறாமை முன்னினிதே
துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே
உற்ற பேராசை கருதி அறனொரூஉம்
ஒற்க மில்லாமை இனிது.

(க—ரை.) பிச்சைவாங்கியுண்பவன் கோபம் இல்லாதிருத்தலும், ஒதுக்குக்குடியிருந்து வருத்தப்படாமையும், அறநெறியைக் கைவிட்டு மனந்தளராமையும் நல்லவைகளாம்.

(அ—ரை.) புக்கு—புகுந்து; பிளிறாமை—கோபியாமை; துச்சில்—ஒதுக்குக்குடி; துயர்கூரா—துன்பப்படாத; உற்ற—மிகுந்த; ஒரூஉம்—நீக்குகிற; ஒற்கம்—மனத்தளர்ச்சி.

50. பத்துக்கொடுத்தும் பதியிருந்து வாழ் வினிதே
வித்துக் குற்றுண்ணா விழுப்பமிக வினிதே
பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலிற் காழினிய தில்.

(க—ரை.) பத்துப்பணம் கொடுத்தாவது தன்னூரில் வாழ்தலும், விதைக்கு வைத்திருக்கும் நெல்லைக்குற்றி உண்ணாமையும், அறிவு நூல்களைப் படித்தலும் நல்லவைகளாம்.

(அ—ரை.) பதி — ஊர்; வித்து — விதை; விழுப்பம் — விருப்பம்; பாங்கு—தகுதி; காழ்—உறுதி.



கபிலர் அருளிச்செய்த

# இன்னா நாற்பது

(சுருக்கம்)



51. கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்த லின்னா
நெடுநீர் புணையின்றி நீந்துத லின்னா
கடுமொழியாளர் தொடர் பின்னா இன்னா
தடுமாறி வாழ்த லுயிர்க்கு.

(க—ரை.) கொடுங்கோல் அரசருக்குக் கீழேவாழ்தலும், வெள்ளத்தில் தெப்பமில்லாமல் நீந்துதலும், கடுமையாகப் பேசுபவர்களுடைய சிநேகமும், தடுமாற்றத்தோடு வாழ்தலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) மன்னர்—அரசர்; இன்னா—துன்பம்; நெடுநீர்—நீண்ட நீர், வெள்ளம்; புணை—தெப்பம்; தொடர்பு—சிநேகம்.

52. எருதி லுழவர்க்குப் போகீர மின்னா
கருவிகள் மாறிப் புறங்கொடுத்த லின்னா
திருவுடை யாரைச் செறலின்னா இன்னா
பெருவலியார்க் கின்னா செயல்.

(க—ரை.) எருதில்லாத உழவர்களுக்கு ஈரமும், ஆயுதங்களின் தொழில்கள் மாறுபட்டுப் பகைவர்களுக்குப் புறங்கொடுத்தலும், செல்வமுடையவர்களைப் பகைத்துக்கொள்ளுதலும், பலமுள்ளவர்களுக்குத் துன்பத்தைச் செய்தலும் துன்பந்தருவனவாம்.

(அ—ரை.) போகீரம்—பதம் கழிந்த ஈரம்; கருவிகள்—ஆயுதங்கள்; திரு—செல்வம்.

53. சிறையில் கரும்பினைக் காத்தோம்பல் இன்னா
உறைசேர் பழங்கூரை சேர்ந்தொழுகல் இன்னா
முறையின்றி யாளும் அரசின்னா இன்னா
மறையின்றிச் செய்யும் வினை.

(க—ரை.) வேலியில்லாத கரும்புத் தோட்டத்தைக் காத்தலும், பழங்கூரை வீட்டில் இருத்தலும், முறைதவறிய அரசாட்சியும், ஆலோசனையின்றிச் செய்யும் காரியமும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) சிறையில்—வேலியில்லாத; காத்தோம்பல்—பாதுகாத்தல்; உறை—துளி; மறை—ஆலோசனை.

54. அறமனத்தார் கூறுங் கடுமொழியு மின்னா
மறமனத்தார் ஞாட்பின் மடிந்தொழுக லின்னா
இடும்பை யுடையார் கொடையின்னா இன்னா
கொடும்பா டுடையார் வாய்ச்சொல்.

(க—ரை.) தருமசிந்தையுள்ளவர்கள் சொல்லும் கடுமையான வார்த்தையும், வீரர்கள் யுத்தத்தில் சோம்பலாக இருத்தலும், தரித்திரர்கள் கொடுத்தலும், நடுவுநிலைமை யில்லாதவர்களுடைய வார்த்தைகளும் துன்பந் தருவனவாகும்.

(அ—ரை.) கூறும்—சொல்லும்; மறமனத்தார்—வீரத்தன்மையுள்ள மனமுடையவர்; ஞாட்பு—யுத்தம்; மடிந்து—சோம்பி; இடும்பை—வறுமைத்துன்பம், தரித்திரம்; கொடும்பாடு—நடுவுநிலைமை யில்லாமை.

55. ஆற்ற விலார்தான் பிடித்த படையின்னா
நாற்ற மிலாத மலரி னழகின்னா
தேற்ற மிலாதான் றுணிபின்னா ஆங்கின்னா
மாற்ற மறியா னுரை.

(க—ரை.) பலமில்லாதவன் பிடிக்கும் ஆயுதமும், வாசனையில்லாத புஷ்பத்தின் அழகும், தெளிவில்லாதவனுடைய துணிபும், சொல்ல அறியாதவனது சொல்லும் தீயவைகளாம்.

(அ—ரை.) ஆற்றல்—பலம்; நாற்றம்—வாசனை; தேற்றம்—தெளிவு; மாற்றம்—சொல்.

56. கள்ளில்லா மூதூர் களிகட்கு நன்கின்னா
வள்ளல்க ளின்மை பரிசிலர்க்கு முன்னின்னா
வண்மை யிலாளர் வனப்பின்னா ஆங்கின்னா
பண்ணில் புரவி பரிப்பு.

(க—ரை.) கள்ளைக் குடிப்பவர்களுக்குக் கள் இல்லாத ஊரும், யாசகர்களுக்கு வள்ளல்களில்லாமையும், பிறருக்குக் கொடுக்கும் தன்மை இல்லாதவர்களுடைய அழகும், சேணம் இல்லாத குதிரை ஒருவனைத் தாங்கிச் செல்வதும் துன்பந் தருவனவாகும்.

(அ—ரை.) களிகள்—கள்ளை உண்டு களிப்பவர்கள்; மூதூர்—பழையவூர்; பரிசிலர்—யாசகர்கள்; பண்—சேணம்; பரிப்பு—தாங்குதல்; வள்ளல்—அளவில்லாது கொடுப்பவன்.

57. பொருளுணர்வார் இல்வழிப் பாட்டுரைத்தல் இன்னா
இருள்கூர் சிறுநெறித் தாந்தனிப் போக்கின்னா
அருளிலார் தங்கண் செலவின்னா இன்னா
பொருளிலார் வண்மை புரிவு.

(க—ரை.) பொருள் தெரிந்துகொள்வோர் இல்லாத இடத்தில் பாட்டைச் சொல்லுதலும், இருட்டில் தனியே செல்லுதலும், அருளில்லாதவர்களிடம் போதலும், பொருளில்லாதவர்களுடைய கொடையும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) இல்வழி – இல்லாதவிடத்தில்; இருள்கூர் – இருள் நிறைந்த; தனிப்போக்கு—தனியே செல்லுதல்; செலவு—போதல்; வண்மை—ஈகை; புரிவு—செய்தல்.

58. மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்தல் இன்னா
துணிவில்லார் சொல்லுந் தறுகண்மை இன்னா
பணியாத மன்னர்ப் பணிவின்னா இன்னா
பிணியன்னார் வாழு மனை.

(க—ரை.) அரசன் மணியில்லாத யானைமேல் ஏறுதலும், துணி வில்லாதவன் சொல்லும் வீரவார்த்தைகளும், பணியாத வேந்தர்கள் பணிதலும், நற்குணங்கள் அமையாத மனைவியர் வாழ்கின்ற வீடும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) குஞ்சரம் – யானை; ஊர்தல் – ஏறிச்செல்லுதல், தறு கண்மை – வீரம்; பணிதல் – வணங்கல்; பிணி அன்னார் – வியாதியை ஒத்த மனைவியர்.

59. புல்லார் புரவி மணியின்றி ஊர்வின்னா
கல்லா ருரைக்குங் கருமப் பொருள்இன்னா
இல்லாதார் நல்ல விருப்பின்னா ஆங்கின்னா
பல்லாருள் நாணப் படல்.

(க—ரை.) மணியில்லாத குதிரையில் ஏறுதலும், கல்லாதார் சொல்லும் காரியமும், செல்வமில்லாதவர் நல்ல தருமங்களைச் செய்ய விரும்புதலும், பலர்க்கெதிரில் அவமானமடைந்து நாணுதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) புல் ஆர் புரவி—புல்லை உண்கின்ற குதிரை; ஊர்வு—ஏறுதல்; நல்ல—நல்லவற்றைச் செய்தல்; விருப்பு—விரும்புதல்.

60. உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பின்னா
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனியின்னா
கண்ணில் ஒருவன் வனப்பின்னா ஆங்கின்னா
எண்ணிலான் செய்யும் கணக்கு.

(க—ரை.) தான் அனுபவியாது சேர்த்துவைக்கும் பொருளும், பொருத்தமில்லாத விரோதிகளோடு சேர்தலும், கண்ணிலாதவனுடைய அழகும், கணிதநூல் அறியாதவன் போடும் கணக்கும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) உண்ணாது – அனுபவியாது; நண்ணா – பொருந்தாத; கனி—மிக; கண்ணில்—கண் இல்லாத; வனப்பு—அழகு; எண்—கணித நூல்.

61. ஆன்றமைந்த சான்றோருள் பேதை புகலின்னா;
மான்றிருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னா;
நோன்றமைந்து வாழாதார் நோன்பின்னா; ஆங்கின்னா
ஈன்றாளை ஓம்பா விடல்.

(க—ரை.) பெரியோரின் நடுவில் பேதை புகுதலும், இருண்ட காலத்தில் வழிச் செல்லுதலும், பொறுத்து அடங்கி வழங்காதார் நோற்றலும், தாயைப் பாதுகாவாமையும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) ஆன்றமைந்த—பரந்த உணர்வுடைய; சான்றோர்—பெரியோர்; மான்று—மயங்கி, போழ்து—காலம்; வழங்கல்—சொல்லுதல்; நோன்றமைந்து—பொறுத்து அடங்கி; நோன்பு—தவம்; ஈன்றாள்—தாய்; ஓம்பா—பாதுகாவாமல்.

62. குலத்துப் பிறந்தவன் கல்லாமை இன்னா
நிலத்திட்ட நல்வித்து நாறாமை யின்னா
நலத்தகையார் நாணாமை இன்னா ஆங்கின்னா
கலத்தல் குலமில் வழி.

(க-ரை.) நற்குலத்துப் பிறந்தவன் கல்லாதிருத்தலும், நல்ல நிலத்தில் விதைத்த விதை முளையாமையும், அழகிய மாதர் நாணமில்லாமல் நடந்துகொள்ளுதலும், நற்குலமில்லாத வழியில் சேர்தலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) வித்து — விதை; நாறாமை — முளையாமை; நலத்தகையார் — நல்ல அழகினையுடையவர், மாதர்; குலம் — நற்குலம்; கலத்தல் — சேர்தல்; வழி—சந்ததி.

63. மாரிநாட் கூவுங் குயிலின் குரலின்னா
ஈரமிலாளர் கடுமொழிக் கூற்றின்னா
மாரிவளம் பொய்க்கின் ஊர்க்கின்னா ஆங்கின்னா
மூரி பெருத்தால் உழவு.

(க—ரை.) மழைக்காலத்தில் கூவும் குயிலின் குரலும், அன்பில்லாதவர் கடுமொழி கூறுதலும், மழை வளம் குறைதலும், அடங்காத எருதினால் உழுதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) மாரி—மழை; ஈரம்—அன்பு; கூற்று—கூறுதல்.

64. ஈத்த வகையா னுவவாதார்க் கீப்பின்னா
பாத்துண வில்லா னுழைச்சென் றுணவின்னா
மூத்த விடத்துப் பிணியின்னா ஆங்கின்னா
ஓத்திலாப் பார்ப்பா னுரை.

(க—ரை.) பெற்ற அளவைக்கொண்டு மகிழாதவனுக்குக் கொடுத்தலும், பிறருக்குக் கொடாமல் தாமும் சாப்பிடாதவரிடத்துச் சென்று உண்ணுதலும், முதுமைப்பருவத்தில் வரும் நோயும், வேதாத்தியயனம் இல்லாத பிராமணனுடைய சொல்லும் துன்பந் தருவனவாகும்.

(அ—ரை.) ஈத்தவகை—கொடுத்தவளவு; உவவாதார்—சந்தோஷிக்காதவர்; ஈப்பு—கொடுத்தல்; பாத்து—பாகம் செய்து; உழை—இடம்; மூத்த இடம்—வயது முதிர்ந்த காலம்; ஓத்து—வேதாத்தியயனம்.

65. யானையில் மன்னரைக் காண்டல் நனியின்னா
ஊனைத்தின் றூனைப் பெருக்குதல் முன்னின்னா
தேனெய் புளிப்பிற் சுவையின்னா இன்னா
கான்யா றிடையிட்ட ஊர்.

(க—ரை.) யானைப்படையில்லாத அரசரைப் பார்த்தலும், மாமிசத்தைத்தின்று சரீரத்தைப் பருக்கச் செய்தலும், தேன் நெய் ஆகிய இவற்றைப் புளித்தபிறகு உட்கொள்ளுதலும், காட்டாற்றின் மத்தியில் அமைந்திருக்கும் ஊரும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) நனி—மிக; கான்யாறு—காட்டாறு.

66. சிறையில்லா மூதூரின் வாயில்காப் பின்னா
துறையிருந் தாடை கழுவுத லின்னா
வறைபறை யாயவர் சொல்லின்னா இன்னா
நிறையில்லான் கொண்ட தவம்.

(க—ரை) மதிலில்லாத ஊரின் வாசலைக் காத்தலும், தண்ணீர்த் துறையில் ஆடை தோய்த்தலும், வாய் அடக்கம் இல்லாத பறைபோன்றவர்களது சொற்களும், ஐம்பொறிகளையும் அடக்கமுடியாதவன் மேற்கொண்ட தவமும் துன்பந் தருவனவாகும்.

(அ—ரை.) சிறை—மதில்; காப்பு—காத்த; துறை—தண்ணீர்த்துறை; அறை—ஒலிக்கின்ற; பறை ஆயவர்—பறை போன்றவர்; நிறை—மனத்தை ஐம்பொறிகளின் வழியாகச் செல்லாமல் நிறுத்தல்.

67. நட்டா ரிடுக்கண்கள் காண்டல் நனியின்னா
ஒட்டார் பெருமிதங் காண்டல் பெரிதின்னா
கட்டில்லா மூதூ ருறையின்னா ஆங்கின்னா
நட்டக வற்றினர் சூது

(க—ரை.) நண்பர்களது துன்பத்தைப் பார்த்தலும், பகைவர்களது கர்வத்தைப் பார்த்தலும், கட்டுப்பாடில்லாத ஊரில் வாழ்தலும், சூதாடுதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) நட்டார்—சிநேகிதர்; இடுக்கண்—துன்பம்; ஒட்டார்—பகைவர்; பெருமிதம்—செருக்கு; கட்டு—கட்டுப்பாடு; உறை—வாழ்தல்; கவறு—தாயக்கட்டை; சூதாடுகருவி.

68. பெரியாரோடு யாத்த தொடர்விடுதல் இன்னா
அரியவை செய்தும் எனவுரைத்தல் இன்னா
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னா இன்னா
பெரியார்க்குத் தீய செயல்.



(க—ரை.) பெரியவர்களுடைய தொடர்ச்சியை விடுதலும், தம்மால் செய்யமுடியாத காரியங்களைச் செய்வோம் என்று சொல்லுதலும், அன்பில்லாதவர்க்குத் தாம் அடைந்த துன்பத்தைச் சொல்லுதலும், பெரியோர்க்குக் கெடுதிகள் செய்வதும் தீயவாம்.

(அ—ரை.) யாத்த — உண்டாக்கிக் கொண்ட; தொடர் — தொடர்பு, பழக்கம்; செய்தும்—செய்வோம்; பரியார்—இரக்கம் காட்டாதவர்; உற்ற—அடைந்தவை, அடைந்த துன்பங்கள்; கூற்று—சொல்லுதல்.

69. பெருமை யுடையாரைப் பீடழித்தல் இன்னா
கிழமை யுடையார்க் களைந்திடுதல் இன்னா
வளமையி லாளர் வனப்பின்னா இன்னா
இளமையுண் மூப்புப் புகல்.

(க—ரை.) பெருமையுடையவரைப் பெருமை கெடச்செய்தலும், உரிமையுடையவர்களை உரியார் அல்லர் என்று விலக்கிவிடுதலும், செல்வமில்லாதவரது அழகும், இளமையில் நோய்களுண்டாதலும் தீயவாம்.

(அ—ரை.) பீடு—பெருமை; கிழமை—உரிமை, சொந்தம்; களைந்திடுதல்—கெடுத்துவிடுதல், விலக்கிவிடுதல்; வளமை—செல்வம்; மூப்பு—முதுமைப்பருவத்து உண்டாவன, நோய்.

70. கல்லாதானூரும் கலிமாப் பரிப் பின்னா
இல்லாதான் சொல்லு முறையின் பயனின்னா
இல்லார்வாய்ச் சொல்லி னயமின்னா ஆங்கின்னா
கல்லாதான் கோட்டி கொளல்.

(க—ரை.) கல்லாதவனை யானை சுமத்தலும், செய்யமாட்டாதான் தன் திறமையைச் சொல்லும் சொற்களும், பொருளில்லாதவர்கள் சொல்லும் சொற்களின் நயமும், கல்லாதவன் சபையில் ஒன்றைச் சொல்லுதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) ஊர்தல்—ஏறி நடத்துதல்; கலி—ஆரவாரம்; மா—யானை பரிப்பு—சுமந்து செல்லுதல்; கோட்டி—சபை.

71. நெடுமர நீள்கோட் டுயர்பாய்தல் இன்னா
கடுஞ்சின வேழத் தெதிர்சேறல் இன்னா
ஒடுங்கி யரவுறையு மில்லின்னா இன்னா
கடும்புலி வாழு மதர்.

(க—ரை.) உயரமான மரக் கிளையிலிருந்து பாய்தலும், கடுங் கோபத்தையுடைய யானைக்கு எதிரே செல்லுதலும், பாம்பு இருக்கின்ற வீட்டில் வாழ்தலும், கொடிய புலிகள் சஞ்சரிக்கும் வழியாகப் போதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) கோடு – கிளை; வேழம்—யானை; சேறல் – செல்லல்; அரவு—பாம்பு; இல்—வீடு; அதர்—வழி.

72. பண்ணமையா யாழின்கீழ்ப் பாடல் பெரிதின்னா
எண்ணறியா மாந்த ரொழுக்குநாட் கூற்றின்னா
மண்ணின் முழவி னொலியின்னா ஆங்கின்னா
தண்மை யிலாளர் பகை.

(க—ரை.) பண் அமையாத யாழின் கீழ் பாடுதலும், கணிதம் அறியாதவர்கள் நாள் பார்த்து அமைத்தலும், மார்ச்சனை இல்லாத மத்தளத்தின் ஓசையும், நற்குணம் இல்லாதவரோடு பகை கொள்ளுதலும் துன்பந் தருவனவாம்.

(அ—ரை.) பண்—இசை; எண்-கணிதம், கணக்கு; மண்-மார்ச்சனை, மத்தளத்தின் வெளிப்புறத்தில் தடவும் பசைபோன்ற கரியபொருள்.

73. தன்னைத்தான் போற்று தொழுகுதல் தற்கின்னா
முன்னை உரையார் புறமொழிக் கூற்றின்னா
நன்மை யிலாளர் தொடர்பின்னா ஆங்கின்னா
தொன்மை யுடையார் கெடல்.

(க—ரை.) தன்னைத்தான் பாதுகாவாமல் வாழ்தலும், எதிரே சொல்லாமல் கோட்சொல்லுதலும், நற்குணம் இல்லாதவருடைய நட்பும், மேலோர் அழிவடைதலும் துன்பந் தருவனவாம்.

(அ-ரை.) போற்ருது-பாதுகாவாது; முன்னை-எதிரே; புறமொழிக் கூற்று-கோட்சொல்லுதல்; தொடர்பு-நட்பு; தொன்மையுடையார்-குடிப்பிறந்த மேலோர்.

74. பொருளிலான் வேளாண்மை காமுறுதல் இன்னா
நெடுமாட நீணகர்க் கைத்தின்மை யின்னா
அடுமனை பார்த்திருந் தூணின்னா இன்னா
கெடுமிடங் கைவிடுவார் நட்பு.

(க-ரை.) பொருளில்லாதவன் விவசாயம் செய்ய விரும்புதலும், பெரிய பட்டணத்தில் ஒருவன் பொருளில்லாதிருத்தலும், சமையல் அறையைப் பார்த்திருந்து உண்ணுதலும், ஆபத்துவேளையில் கைவிடுவோரது நட்பும் தீயவைகளாம்.

(அ-ரை.) வேளாண்மை - விவசாயம்; காமுறுதல் - விரும்புதல்; நகர்-பட்டணம்; கைத்து இன்மை-கையில் பொருள் இல்லாதிருத்தல்; அடுமனை-சமையல் இடம்; ஊண்-உண்ணும் உணவு; நட்பு-சிநேகம்.

75. கொடுக்கும் பொருளில்லான் வள்ளன்மை இன்னா
கடித்தமைந்த பாக்கினுட் கற்படுத லின்னா
கொடுத்து விடாமை கவிக்கின்னா இன்னா
மடுத்துழிப் பாடா விடல்.

(க-ரை.) பொருளில்லாதவனது உதாரத்துவமும், கடித்த பாக்கினுள்ளே கல் இருத்தலும், கவிகளுக்குப் பொருள் கொடுத்தனுப்பாமையும், தானத்துக் கேற்க அகப்படாதொழிதலும் துன்பந் தருவனவாம்.

(அ-ரை.) வள்ளன்மை - கொடைத்தன்மை; விடாமை - அனுப்பாமை; கவி - கவிபாடுவோன்; மடுத்துழி - தானத்துக்கேற்க; பாடா விடல்-அகப்படா தொழிதல்.

76. அடக்க முடையவன் மீளிமை யின்னா
துடக்க மில்லாதவன் தற்செருக் கின்னா
அடைக்கலம் வவ்வுதல் இன்னா ஆங்கின்னா
அடக்க அடங்காதார் சொல்.

(க-ரை.) ஐம்பொறிகளை அடக்கியவனது சொல்வன்மையும், தொடங்கிய காரியத்தைச் செய்யமாட்டாதவன் தன்னைத்தானே மதித்தலும், காப்பாற்றிவைத்துக் கேட்கும்போது கொடுக்கவேண்டிய பொருளைக் கவர்ந்துகொள்ளுதலும், அறிவுடையோர் அடக்கினும் அடங்காதவரது வாய்ச்சொல்லும் தீயவென்பதாம்.

(அ—ரை.) அடக்கம்—ஐம்பொறிகளையடக்குதல்; மீளிமை—சொல் வன்மை, வீரத்திறம்; துடக்கம்—ஆரம்பம்; அடைக்கலம்—அடைக்கலப் பொருள்; வவ்வுதல்—கவர்ந்துகொள்ளுதல்.

77. கண்வனப்புக் கண்ணோட்டங் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப்பித் துணையா மென்றுரைத்தல்—பண்வனப்புக்
கேட்டார் நன்றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டானன் றென்றல் வனப்பு.

(க—ரை.) கண்ணுக்கு அழகு தாக்ஷண்யம், காலுக்கு அழகு யாசகத்துக்காகச் செல்லாமை, ஆலோசனைக்கு அழகு துணிந்துரைத்தல், பாட்டுக்கு அழகு கேட்டவர் நன்று எனல், அரசனுக்கு அழகு தன் நாட்டிலுள்ளாரை வருத்தமாட்டான் என்று யாவராலும் புகழப்படுதல்.

(அ—ரை.) வனப்பு—அழகு; கண்ணோட்டம்—தாக்ஷண்யம்; எண்—ஆலோசனை; இத்துணை—இவ்வளவு; பண்—பாட்டு; கிளர்தல்—விளங்குதல்; வாட்டுதல்—வருத்துதல்.

78. சிலம்பிக்குத் தன்சினை கூற்றம் நீள்கோடு
விலங்கிற்குக் கூற்ற மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை.

(க—ரை) சிலந்திப்பூச்சிக்கு அதன் முட்டையும், மிருகங்களுக்கு நீண்டகொம்புகளும், கவரிமாவிற்கு அதன் மயிரும், நண்டுக்கு அதன் குஞ்சுகளும், ஒருவனுடைய நாக்குக்குப் பிறர்மேல் பழிகூறுதலும் யமன் ஆகும்.

(அ—ரை.) சிலம்பி—சிலந்தி; சினை—முட்டை; கோடு—கொம்பு; வலம் படுதல்—வெற்றி உண்டாதல்; ஞெண்டு—நண்டு; பார்ப்பு—குஞ்சு; நன்று அல்வசை—நன்மை அல்லாத பழிமொழி.

79. நாணிலான் சால்பு நடையிலான் நன்னேன்பும்
ஊணிலான் செய்பு முதாரதையு—மேணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை.

(க—ரை.) நாண மில்லாதவனுடைய அமைதியும், நன்னடையில்லாதவனுடைய விரதமும், தான் சாப்பிடுவதற்குப் போதுமான பொருள் இல்லாதவனுடைய உதாரகுணமும், தேகவலிமை இல்லாதவனுடைய சேவகமும், செந்தமிழில் தேர்ச்சியில்லாதவன் கவிபாடுதலும் பயனில்லாதன.

(அ—ரை.) சால்பு—அமைதி; உதாரதை—பிறருக்குக் கொடுக்கும் குணம்; எண்—வலிமை; தேற்ருன்—தேர்ச்சியடையாதவன்; நாவகம்—நாவினிடம், நாக்கு; நகை-சிரிப்புக்கு இடமாகும்.

80. பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை
யிழைத்த தீங்கெண்ணி யிருத்தல்—இழைத்த
பகைகெட வாழ்வதும் பலபொருளார் நல்லார்
நகைகெட வாழ்வது நன்று.

(க—ரை.) தனக்குப் பிறர்செய்த பிழையைப் பொறுத்துக்கொள்ளுதல் பெருமையாகும், பிறர்செய்த தீமையை நினைத்துக்கொண்டே இருத்தல் சிறுமையாகும், தான் செய்த பிழைகள் கெடும்படி வாழ்தலும், தனக்கு உதவிசெய்தவர்களும் மற்ற நல்லவர்களும் நகைத்தற்கிடமில்லாமல் வாழ்தலும் நன்மையாம்.

(அ—ரை.) பிழைத்தல்—பிழைசெய்தல்; எண்ணியிருத்தல் - மறவாதிருத்தல்; இழைத்தல்-செய்தல்; பகை—பிழை; பலபொருளார் - பல பொருள்களையும் உதவினோர்.

81. பூவாது காய்க்கும் மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார்—தாவா
விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமை செல்லு முணர்வு.

(க—ரை.) பூவாதே காய்க்கும் சில மரங்களைப்போல நன்மையை அறிபவர் வயதில் சிறியவர்களாயிருந்தாலும் மூத்தவரேயாவர், நூல்களைக் கற்றுவல்லவரும், அத்தன்மையரே, பாத்திகட்டி விதைக்காமலே முளைக்கிற வித்துமுண்டு, அதுபோல அறிவுடையார்க்குப் பிறர் அறிவியாமலே அறிவு தானே தோன்றும்.

(அ—ரை.) தாவா—கெடாமலிருக்க; நாறுவ—முளைப்பன; மேதை-அறிவு, அறிவுடையவன்; உணர்வு—அறிவு.

82. பூத்தாலுங் காயா மரமுள நன்றறியார்
மூத்தாலும் மூவர்நூல் தேற்ருதார்—பாத்திப்
புதைத்தாலும் நாருத வித்துள பேதைக்
குரைத்தாலுஞ் செல்லா துணர்வு.

(க—ரை.) பூத்தாலும் காய்க்காத மரமுண்டு, அதுபோல நன்மை அறியாதவர் ஆண்டில் முதிர்ந்தாலும் அறிவில் தேர்ச்சியடையமாட்டார். பாத்திகட்டிப் புதைத்தாலும் முளைக்காத வித்தும் உண்டு; அதுபோல அறிவில்லாதவனுக்குப் பிறர் சொன்னாலும் அறிவு உண்டாகாது.

(அ—ரை.) நன்று—நன்மை; தேற்றுதார்—தேர்ச்சி யடையாதவர்கள்; பாத்தி – பாத்திகட்டி; நாறுத—முளைக்காத; பேதை – அறிவில்லாதவன்.

83. பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள் வௌவன்மின்
கருங்குணத்தார் கேண்மை கழிமின்—ஒருங்குணர்ந்து
தீச்சொல்லே காமின் வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லே யன்று வழக்கு.

(க—ரை.) நற்குணமுடையாரைச் சேருங்கள், பிறன்பொருளைக் கவராதிருங்கள், கெட்ட குணமுடையவர்களின் சிநேகத்தை ஒழியுங்கள், தீயசொற்களையே வழங்காதிருங்கள், யமன் வருவான், இது உண்மையே.

(அ—ரை.) வௌவன்மின்—கவராதிருங்கள்; கேண்மை—சிநேகம்; கா—காத்தல்; காமின் – (சொல்லாது) தடுங்கள்; காலன்—யமன்; திண்ணிது-உண்மையானது.

84. வேட்பவன் பார்ப்பான் விளங்கிழைக்குக் கற்புடைமை
கேட்பவன் கேடில் பெரும்புலவன்—பாட்டவன்
சிந்தையா னுடுஞ் சிறந்த வுலகினுள்
தந்தையா னுடுங் குலம்.

(க—ரை.) யாகம் செய்பவன் பார்ப்பான், கற்புடையவள் பெண், பலநூல்கள் கேட்டறிந்தவன் பெரும்புலவன், அவனுற் பாடப்படும் பாட்டு உலகிற் சிறந்தது, ஒருவனுடைய குலம் அழகுபெற்று விளங்குவது அவனது தந்தையாலே யாம்.

(அ—ரை.) வேட்பவன்—யாகஞ்செய்பவன்; விளங்கிழை—விளங்குகின்ற ஆபரணம், பெண்; கற்பு—பதிவிரதாதர்மம்; குலம்—உயர் குடிப்பிறப்பு.

85. மயிர்வனப்பும் கண்கவரு மார்பின் வனப்பு
முகிர்வனப்புங் காதின் வனப்பும்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

(க—ரை.) தலைமயிரின் அழகு, மார்பினழகு, நகத்தின் அழகு, காதின் அழகு, பல்லின் அழகு ஆகிய இவற்றைக்காட்டிலும் நூல்களிலுள்ள சொல்லின் அழகே சிறந்ததாம்.

(அ—ரை.) உகிர்—நகம்; செயிர்-குற்றம்; வனப்பு—அழகு.

86. பொய்யாமை நன்று பொருள்நன்று உயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்காற்—பல்லார்முற்
பேணாமை பேணும் தகைய சிறிதெனினும்
மாணாமை மாண்டார் மனம்.

(க—ரை.) ஒருவன் பொய் சொல்லாதிருத்தலும், திரவியம் தேடுதலும், வேறு உயிரைக் கொல்லாதிருத்தலும், தான் விரும்பு மவற்றைப் பலர் அறிய விரும்பாமையும், தவசிகளுடைய மனம் இல்வாழ்க்கையில் திரும்பாமையும் நன்மையாம்.

(அ—ரை.) பொய்யாமை – மெய்சொல்லுதல்; கொழித்தல்—ஆராய்தல்; பேணுதல்—விரும்புதல்; தகைய—தன்மையவற்றை; மாண்டார்—மாட்சிமைப்பட்டார்; மாணாமை—ஒருப்படாமை.

87. வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்து விருந்தோம்பித்—திருவாக்குந்
தெய்வதையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டீர் சிறப்பு.

(க—ரை.) தம் கணவரது வருமானத்தின் அளவை அறிதலும் அதற்கேற்ப வழங்குதலும், சுற்றத்தாரிடம் அன்புபாராட்டலும், விருந்தினரை உபசரித்தலும், தெய்வவழிபாடும் ஆகிய இவைகள் மாதர்க்குச் சிறப்பைத் தருவனவாகும்.

(அ—ரை.) வருவாய் – வருமானம்; வழக்கு—பிறருக்குக் கொடுத்தல்; வெருவாமை—கோபம்கொள்ளாதிருத்தல்; ஓம்புதல்—உபசரித்தல்; ஆக்குதல்—விருத்தி செய்தல்; தேற்றம்—தெளிவு.

88. கொல்லாமை நன்று கொலைதீ தெழுத்தினைக்
கல்லாமை தீது கதந்தீது—நல்லார்
மொழியாமை முன்னே முழுதுங் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி.

(க—ரை.) ஒருயிரையுங் கொல்லாதிருத்தல் நல்லது; உயிரைக் கொல்லுதலும், கல்வி கற்றுக்கொள்ளாமலிருத்தலும், கோபமும் தீயவைகளாம்; அறிவுடையார் சொல்வதற்குமுன்பே ஒருவராலும் பழிக்கப் படாத நல்வழியில் நடப்பவன் பலருக்கும் தலைவனாயிருத்தற் குரியன்.

(அ—ரை.) கதம்—கோபம்; நல்லார்—அறிவுடையார்; கிளைஞர் - சுற்றத்தார்; பதி—இறைவன்.

89 குளந்தொட் டுக்கோடு பதித்து வழிசீத்
துளந்தொட் டுழுவய லாக்கி—வளந்தொட்டுப்
பாகுபடுங் கிணற்றோ டென்றிவ்வைம் பாற்படுத்தா
னேகுஞ் சுவர்க்கத் தினிது.

(க—ரை.) குளம் வெட்டுதல், நல்ல சோலைகளை ஏற்படுத்தல், சாலைகளைச் சீர்திருத்தல், மேடான நிலங்களைத்தோண்டி உழுவயலாகச் செய்தல், கிணறு தோண்டுதல் ஆகிய அறங்களைச் செய்தவன் சுவர்க்க லோகத்தை யடைவான்.

(அ—ரை.) தொடுதல்—தோண்டுதல்; கோடு—கிளை; மரம்—சோலை; சீத்து—சீர்திருத்தி; பாகுபடும்—பகுக்கப்படும்; ஐம்பால்—ஐந்து தருமம்; ஏகும்—செல்வான்.

90. தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிறராற் கருதற் பாடுணர்ந்து—தான்பிறராற்
சாவவென வாழான் சான்றோராற் பல்யாண்டும்
வாழ்கவென வாழ்தல் நன்று.

(க—ரை.) ஒருவன் தான் பிறந்தகுடியின் பெருமையை நினைந்து தன்னை நல்லொழுக்கத்திலே நிலைநிறுத்திப் பிறரால் மதிக்கப்படும் செய்கைகளை அறிந்துகொள்ளுதல் நல்லது; பிறரால் செத்தொழிக என்று சொல்லப்படாமல் சான்றோரால் வாழ்த்தப்பட்டு உயிர் வாழ்ந்திருத்தல் நல்லது.

(அ—ரை) கருதற்பாடு — மதிக்கப்படுதற்குரிய செய்கை; சாவ—செத்தொழிக; சான்றோர்—பெரியோர்.

91. பஞ்சப் பொழுது பாத்துண்பான் காவாதான்
அஞ்சா தடைபடையுட் போந்தெறிவா—னெஞ்சாதே
யுண்பதுழ னீவான் குழவி பலிகொடுப்பான்
எண்பதின் மேலும் வாழ்வான்.

(க—ரை) பஞ்சக்காலத்தில் பிறருக்குக் கொடுத்து உண்பவனும், தனக்காக ஒன்றையும் தேடிவைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் பிறருக்குக் கொடுப்பவனும், சேனையிற்புகுந்து பகைவருடைய படையை எறிபவனும், தான் உண்பதைப் பிறருக்குக் கொடுத்துப்பின் உண்பவனும், பசித்த குழந்தைகளுக்குச் சோறு அளிப்பவனும் எண்பது பிராயத்துக்கு மேலும் சுகமாக உயிர்வாழ்ந்திருப்பார்கள்.

(அ—ரை.) பாத்து—பகுத்து; எஞ்சாதே — ஒருநாளுமொழியாமல்; குழவி—குழந்தை; பலி—சோறு.

92. நகையொடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையொடு பாட்டுரையென் றைந்துந்—தொகையொடு
மூத்தோ ரிருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தா ரறிந்தவ ராய்ந்து.

(க—ரை.) பெரியோர் கூடியிருக்குமிடத்தில் அறிவுடையோர் சிரிக்கவும், ரகசியமாகப்பேசவும், பக்ஷபாதம் பேசுதலும், பிறரொடு பகைகொள்ளவும், பாட்டுக்குப்பொருள் சொல்லவும் விரும்பமாட்டார்.

(அ—ரை.) மந்திரம் — ரகசியம்; வாரம் — அன்பு, பக்ஷபாதமான பேச்சு; உரை—உரை கூறுதல்; யாத்தல்—பொதிந்து வைத்தல்.

93. ஈவதுநன்று தீது ஈயாமை நல்லவர்
மேவது நன்றுமே வாதாரோ—டோவாது
கேட்டுத் தலைநிற்க கேடி லுயர்கதிக்கே
யோட்டுத் தவநிற்கு மூர்ந்து.

(க—ரை.) பிறருக்கு ஒரு பொருளைக்கொடுப்பது நன்று, கொடாமை தீது, பகைக்கத் தக்கவர்களோடும் சிநேகமாயிருப்பது நன்று, எப்பொழுதும் நல்ல நூற்பொருளைக் கேட்டு நன்னெறியில் நிற்கவேண்டும், அப்படி இருத்தல் மோக்ஷத்திற்குத் துணையாகும்.

(அ—ரை.) மேவது—பொருந்தி இருத்தல்; ஓவாது—இடையறாமல்; கேடு—அழிவு; தவ—மிகுதியாக; ஊர்ந்து—மேம்பட்டு.



நல்லாதனார் அருளிச்செய்த

# திரிகடுகம்

(சுருக்கம்)



குறிப்பு.—திரிகடுகம் என்பதற்கு, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றுஞ்சேர்ந்த ஒரு மருந்து என்பது பொருள். நோயை நீக்கி மருந்து ஆரோக்கியத்தைக் கொடுப்பதுபோல ஜனங்களின் அறியாமையை நீக்கி நல்லறிவு கொடுக்கும் மும்மூன்று விஷயங்கள் அடங்கிய பாடல்கள் உள்ள நூலாதலின் இஃது இப்பெயர் பெற்றது.

94. பகைமுன்னர் வாழ்க்கை செயலும், தொகைநின்ற
பெற்றத்துள் கோலின்றிச் சேறலும்,—முற்றன்னைக்
காய்வானைக் கைவாங்கிக் கோடலும், இம்மூன்றும்
சாவ வுறுவான் தொழில்.

(க—ரை.) பகைவருக்கு முன்னே செல்வத்தோடு வாழ்தலும், பசுக்கூட்டத்தின் நடுவே கோலில்லாமல் செல்லுதலும், தன்னை வருத்துபவனை உறவாக்கிக் கொள்ளுதலும் ஆகிய இம்மூன்றும் கெட்டுப் போக இருப்பவனுடைய செய்கைகளாம்.

(அ—ரை.) பகை—பகைவர்; வாழ்க்கை செயல்—வாழ்தல்; பெற்றம்—பசு; முற்றன்னை—முன்தன்னை; காய்வான்—வருத்துவோன்; கோடல்—கொள்ளுதல்; சாவ—கெட.

95. தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்;
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்;
கோளாளன் என்பான் மறவாதான்; இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது.

(க—ரை.) பிறரிடம் கடன்வாங்காமல் வாழ்பவனே முயற்சியுடையவன்; விருந்தினரை வைத்துவிட்டு உண்ணாதவன் வேளாளன் என்பவன்; ஒன்றையும் மறவாதவனே கோளாளன் ஆவான்; இம்மூவரும் சேர்ந்து வாழ்தல் நல்லது.

(அ—ரை.) தாளாளன்—முயற்சியுடையவன்; கோளாளன்—ஞாபகசக்தி யுள்ளவன்; கேளாக—நட்பாக.

96. ஆசை பிறன்கண் படுதலும் பாசம்
பசிப்பமடியைக் கொளலும்—கதித்தொருவன்
கல்லானென் றெள்ளப் படலும் இம்மூன்றும்
எல்லார்க்கும் இன்னா தன.

(க—ரை.) பிறர் பொருளுக்கு ஆசைப்படுதலும், சோம்பலும், படிக்காதவனென்று இகழப்படுதலும் துன்பந்தருவனவாம்.

(அ—ரை.) ஆசைபிறன்கட்படுதல்=பிறன்கண் ஆசைப்படுதல்—பிறனொருவனிடத்திலுள்ள பொருளுக்கு இச்சைப்படுதல்; பாசம்—சுற்றம்; மடி—சோம்பல்; கதித்து—கோபித்து; எள்ளப்படுதல்—இகழப்படுதல்.



கணிமேதாவியார் அருளிச்செய்த

# ஏலாதி

( சுருக்கம் )

97. வருவாயுள் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்ப
செய்தவை நாடாச் சிறப்புடைமை—எய்த
பலநாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள்.

(க—ரை.) வருவாயில் நாலில் ஒருபங்கு தருமஞ்செய்தலும், யுத்தத்தில் தான் செய்த உபாயங்களைப் பிறர் அறியாது காத்தலும், நற்பொருளை யறிதலும் நல்லோர்களுடைய கொள்கைகள்.

(அ—ரை.) வருவாய்—வரும்படி; வழங்கி—கொடுத்து; செரு—கண்டை; வாய்ப்ப—ஜயமுண்டாக; மாட்சி—பெருமை; கோள்—கொள்கை.

98. தானங் கொடுக்குந் தகைமையும் மானத்தார்
குற்றங் கடிந்த வொழுக்கமும்—தெற்றென
பல்பொருள் நீங்கிய சிந்தையும் இம்மூன்றும்
நல்வினை யார்க்கும் கயிறு.

(க—ரை.) உதாரகுணமும், நல்லொழுக்கமும், நிறுத்தமனமுடைமையும் மிக நல்லவைகளாம்.

(அ—ரை.) தகைமை—குணம்; கடித்த—நீக்கிய; தெற்றென—தெளிவாக; சிந்தை—மனம்; ஆர்க்கும்-கட்டும்.

விளம்பிநாகனுர் அருளிச்செய்த

# நான் மணிக்கடிகை

( சுருக்கம் )

99. எள்ளற்க என்றும் எளியரென் றென்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கை மேல்வர—உள்சுடினும்
சீறற்க சிற்றிற் பிறந்தாரை கூறற்க
கூறல் லவற்றை விரைந்து.

(க—ரை.) இகழாமையும், தகாதாரிடம் யாசியாதிருத்தலும், கோப மின்மையும், தகுதியில்லாதனவற்றைச் சொல்லாதிருத்தலும் ஒருவ னுக்கு முக்கியமான குணங்களாம்.

(அ—ரை.) எள்ளற்க — இகழாதிருக்க; என்றும் — எப்பொழுதும்; என்பெறினும் — என்ன கிடைத்தாலும்; சீறற்க — கோபியாதிருக்க; கூறற்க—சொல்லாதிருக்க; கூறல்லவற்றை—சொல்லத்தகாதவற்றை.

100. கன்ருமை வேண்டும் கடிய பிறர்செய்த
நன்றியை நன்ருகக் கொளல்வேண்டும்—என்றும்
விடல்வேண்டும் தன்கண் வெகுளி அடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை.

(க—ரை) பிறர் செய்யுந் தீமைக்கு மனம் வருந்தாமையும், செய்ந் நன்றியறிதலும், கோபத்தை யடக்கலும், செல்வத்தையழிக்கும் காரி யத்தைச் செய்யாமையும் கொள்ளத்தக்கன.

(அ—ரை.) கன்ருமை—மனம் வருந்தாமை; கடிய—கடுமையான வை; அடல்—நீக்கல்; சிதைக்கும்—கெடுக்கும்; வினை—காரியம்.

101. இன்னுமை வேண்டின் இரவெழுக இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக—தன்ெனுடு
செல்வது வேண்டின் அறஞ்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல்.

(க-ரை.) யாசகம் செய்யாமையும், புகழை நிலைநிறுத்தலும், அறஞ்செய்தலும், சினத்தை அடக்கலும் அவசியமானவை.

(அ-ரை.) இன்னுமை—துன்பம்; இரவு—யாசகம்; இசை—கீர்த்தி.

102. இளமைப் பருவத்துக் கல்லாமை குற்றம்
வளமிலாப் போழ்தத்து வள்ளன்மை குற்றம்
கிளைஞரில் போழ்திற் சினங்குற்றங் குற்றம்
தமரல்லார் கையகத் தூண்.

(க—ரை.) இளமையில் கல்வி பயிலாமையும், வருவாயில்லாத காலத்தில் கொடையும், சுற்றத்தாரில்லாத காலத்தில் வெகுளலும், தம் மைச் சேராதவரிடத்தில் உணவை உண்டலும் குற்றங்களாம்.

(அ-ரை.) வளம்-வருவாய்; வள்ளன்மை-ஈகை; கிளைஞர்-பந்துக் கள்; ஊண்-உணவு.

PRINTED AT THE DIOCESAN PRESS, MADRAS—1923 B. 1834.

## மாக்மில்லன் கம்பெனியாரால் பதிப்பிக்கப்பட்ட ஸெகண்டரி பாடசாலை வகுப்புக்களுக்குரிய தமிழ்ப் புஸ்தகங்கள்.

பல படங்களடங்கிய இந்துதேசத்துப் பழைய கதைகளின் தொகுதிகள்.

| இரேட். | நம்பர். | | விலை, | அணா. |
|---|---|---|---|---|
| III. | 1. | சீதாராமர்களின் பிறப்பும், வனவாசமும், சஞ்சாரமும் .... .... .... .... | ,, | 4 |
| ,, | 2. | உத்தர இராமாயணக் கதைகள் .... .... | ,, | 4 |
| ,, | 3. | ஸாதியின் விவேக விளக்கம் .... .... | ,, | 4 |
| IV. | 1. | மகாபாரதக் கதைகள் முதற் பாகம் .... | ,, | 4½ |
| ,, | 2. | ,, இரண்டாம் பாகம் .... | ,, | 4½ |
| ,, | 3. | ஸூரபனும், ரூஸ்தாமனும் .... .... | ,, | 4½ |
| V. | 1. | மன்னவனும் மாணிக்கங்களும் .... .... | ,, | 5 |
| ,, | 2. | வேதாளக் கதைகள் .... .... .... | ,, | 5 |
| ,, | 3. | ஹதிம்தாயின் வீரச்செயல்கள் .... .... | ,, | 5 |

திவான் பஹதூர்—ச. பவானந்தம் பிள்ளை அவர்கள் தொகுத்த
தமிழ் இலக்கியத்திரட்டு பகுதி I .... .... ,, 12
,, ,, பகுதி II .... .... ,, 8
ஸ்ரீசைல தாதாசாரியர் எழுதிய இரகுவம்சம் .... .... ,, 5
ஸ்ரீமான். செல்வகேசவராய முதலியார் எழுதிய அராபிக் கதைகள் .... .... .... .... .... ,, 5
சி. ப. வேங்கடராம ஐயரவர்கள் இயற்றிய இளமையும் ஒழுக்கமும் அல்லது இரண்டு பிள்ளைகள் (புதிய பதிப்பு). ,, 10
மோசூர் வேங்கடசாமி ஐயரவர்கள் இயற்றிய தமிழ் இலக்கணம் (ஆறும் பதிப்பு.) .... .... .... ,, 12
ஜெ. வி. செஸ்பீல்ட் துரையவர்களியற்றிய தமிழ்—இங்கிலீஷ் இலக்கணம்—முதற் பாகம்—சொல்லியல் .... ,, 5
,, இரண்டாம் பாகம்—அன்வயம்பண்ணுதல் .. ,, 10
வெங்கடசுப்பையா அவர்கள் இயற்றிய
ஆரம்ப கணிதம்—முதற் பாகம் .... .... .... ,, 8
,, இரண்டாம் பாகம் .... .... ,, 9
இரங்காசாரியர் எழுதிய இளைஞர் தாவரநூல் .... .... ,, 8
இரென்துரை இயற்றிய சுகாதார விளக்கம் (புதிய பதிப்பு). ,, 10
சுகாதார விளக்கக் கதைகள்—முதற் பாகம் .... .... ,, 4
,, இரண்டாம் பாகம் .. .... ,, 6
ஸ்ரீமான் கே. ஏ. வீரராகவாசாரியாரவர்கள் இயற்றிய
பிரிட்டிஷ் ஸாம்பிராஜ்யத்தின் பூகோளம் .... .... ,,ரூ. 1-0
பூகோள விளக்கம்—முதற் பாகம் .... .... .... ,, 8
,, இரண்டாம் பாகம் .. .... .... ,, 8
இந்துதேச சரித்திரம் .... .... .... .... ,,ரூ. 1-0
நம்நாடும் பிறநாடும்—முதற் பாகம் .... .... .... ,, 8